# சிவஞானபோதம்

## (அறிவின் அறிவு)

பதவுரை - தெளிவுரை

செந்தமிழ்ப்புரவலர்
திருக்குறள்வேள்
**ஜி. வரதராஜன்,** பி.ஏ.



**பழனியப்பா பிரதர்ஸ்**
'கோனார் மாளிகை'
25, பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600 014.

*கிளைகள் :*

திருச்சி - 620 002 சேலம் - 636 001
கோயமுத்தூர் - 641 001 மதுரை - 625 001
ஈரோடு - 638 001.

முதற் பதிப்பு : 1980, ஆகஸ்டு
இரண்டாம் பதிப்பு : 2011
மூன்றாம் பதிப்பு : 2018





ISBN : 978-81-8379-550-0

விலை : ₹ 50/-

**கிளைகள்**

**திருச்சி**
**பழனியப்பா பிரதர்ஸ்**
அஞ்சல் பெட்டி எண் 312,
தெப்பக்குளம்,
திருச்சிராப்பள்ளி - 620 002.
**தொலைபேசி : 0431-2702160.**

**சேலம்**
**பழனியப்பா பிரதர்ஸ்**
77, செர்ரி சாலை,
சேலம் - 636 001.
**தொலைபேசி : 0427-2450711.**

**கோவை**
**பழனியப்பா பிரதர்ஸ்**
683, ராஜா தெரு,
கோயமுத்தூர் - 641 001.
**தொலைபேசி : 0422-2393704.**

**மதுரை**
**பழனியப்பா பிரதர்ஸ்**
23-A, மேற்குக் கோபுரத் தெரு,
மதுரை - 625 001.
**தொலைபேசி : 0452-2346258.**

**ஈரோடு**
**பழனியப்பா பிரதர்ஸ்**
959, ப்ரஃப் சாலை,
ஈரோடு - 638 001.
**தொலைபேசி : 0424-2256261.**

ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை - 600 014, தொலைபேசி : 044-4340 8014.

உ
திருச்சிற்றம்பலம்

## முதற்பதிப்புக்கு ஆசிரியர் அளித்த

# முன்னுரை

சைவ சமயத்துக்கே உரிய நூல்கள் தோத்திரங்களும் சாத்திரங்களுமாகும்.

1. தோத்திரங்களைப் பன்னிரு திருமுறைகளாகவும், சாத்திரங்களைப் பதினான்கு நூல்களாகவும் கூறுவர். திருஞானசம்பந்தர் பாடியருளிய பதிகங்களை முதல் மூன்று திருமுறையாகவும், திருநாவுக்கரசர் அருளிய தேவாரத்தை நான்கு, ஐந்து, ஆறு ஆகிய திருமுறையாகவும், சுந்தரர் அருளிச்செய்த பாடல்களை ஏழாவது திருமுறையாகவும், மாணிக்கவாசக அடிகள் அருளிச்செய்த திருவாசகம், திருக்கோவையார் ஆகியவற்றை எட்டாவது திருமுறையாகவும், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஆகியவற்றை ஒன்பதாவது திருமுறையாகவும், திருமூலர் அருளிச்செய்த திருமந்திரத்தைப் பத்தாவது திருமுறையாகவும்

2. ஆலவாய்ப்பெருமான் முதலிய பன்னிரு அருளாளர்கள் பாடிய பாடல்களைப் பதினோராவது திருமுறையாகவும், சேக்கிழார் அருளிச்செய்த பெரியபுராணத்தைப் பன்னிரண்டாவது திருமுறையாகவும் பெரியோர்கள் திருமுறையை வரிசைப்படுத்தியுள்ளனர்.

3. திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்பநிராகரணம் ஆகிய பதினான்கு நூல்களும், பதினான்கு சாத்திரங்களாகும்.

4. திருவுந்தியார் முதலிய மூன்றும் முறையே திருவியலூர் உய்யவந்த தேவநாயனார், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், மெய்கண்ட தேவநாயனார் என்பவரால் அருளிச் செய்யப்பெற்றவை. அருள்நந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியாரையும், இருபா இருபஃதையும் அருளிச்செய்தார். உண்மை விளக்கம், திருவதிகை மனவாசகங் கடந்தாரால் அருளிச்செய்யப்பெற்றது. ஏனைய எட்டு நூல்களும் உமாபதி சிவாச்சாரியார் அருளிச்செய்தவையாம்.

**"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்**
**பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தவருள்**
**பண்பயனா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு**
**உண்மைநெறி சங்கற்பம் உற்று"**

என்ற வெண்பாவால் பதினான்கு சாத்திரங்களின் பெயர் முறைகளை நினைவுபடுத்திக்கொள்ளலாம். இவற்றுள் மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞானபோதமே சித்தாந்த முழுமுதல் நூலாய் விளங்குவது.

5. இந்நூல் பன்னிரு சூத்திரங்களைக் கொண்டது. மொத்தம் 40 அடிகளையே உடையது. இத்துணைச் சிறிய நூலில் பெரிய சமய உண்மைகளைக் கூறிய நூலை வேறு எம்மொழியிலும் பார்க்கமுடியாது.

6. திருமுறைகளில் பரக்கக் காணப்பட்ட உண்மைகளை வரிசைப்படுத்திச் சுருக்கமாய் விளக்கிய பெருமை மெய் கண்டாருக்கே உரியது.

7. முதற்சூத்திரத்தில் காணப்பட்ட உலகத்தைக்கொண்டு காணப்படாத முதல்வன் உண்மையை நிறுவினார். இது திருவள்ளுவர் காட்டிய நெறியாகும்.

8. இரண்டாவது சூத்திரத்தில் இருவினை உண்மை கூறி,

9. மூன்றாவது சூத்திரத்தில் ஆன்மா உண்டு என்று கூறுகிறார். நான்காவது சூத்திரத்தில் உயிரினது இயல்பினைக் கூறி, ஐந்தாவது சூத்திரத்தில்,

10. அவ்வுயிர் முதல்வனால் அறிகிறது என்று கூறுகிறார். ஆறாவது சூத்திரத்தில் முதல்வன் வாக்கு, மனம் முதலிய வற்றால் அறியப்படாதவன் என்றும், அருட்கண்ணாலே அறியப் படுபவன் என்றும் கூறுகிறார். அவனை அறிவதற்குரிய தகுதி உயிருக்கே உண்டு என்று ஏழாவது சூத்திரத்தில் கூறுகிறார். எட்டாவது சூத்திரத்தில் முதல்வனே குருவாய் வந்து உயிருக்குத் தன்னை உணரும் திறத்தை உணர்த்துவான் என்கிறார்.

11. தேவாரம் முதலிய தோத்திரப்பாடல்களை இலக்கிய மாகவும், சிவஞானபோதம் முதலிய சாத்திரங்களை இலக்கண மாகவும் கொள்ளுவது மரபு.

ஒன்பதாவது சூத்திரத்தில் உபதேசப்பொருளைச் சிந்திக்கும் நெறியை உணர்த்துகின்றார். இறைநெறியில் நின்றால் துன்பம் நீங்கும் என்றும், இன்பம் உண்டாகலாம் என்றும் பத்து, பதினொன்று ஆகிய சூத்திரங்களில் கூறிப் பன்னிரண்டாவது சூத்திரத்தில் இறைஞானம் எய்தியபோதும் இன்றியமையாதவை அடியார் வழிபாடும், ஆலய வழிபாடும் ஆகும் என்று கூறுகிறார். இவ்வாறு பன்னிரு சூத்திரங்களில் முப்பொருள் உண்மையைக் கூறிப் பற்றினை விட்டு மெய்ப் பொருளை அடைவதற்குரிய நெறியினைச் சுருக்கமாயும் விளக்கமாயும் கூறிய பெருமை மெய்கண்டாருக்கே உண்டு.

சிவஞானபோதம் என்ற அரிய நூலுக்குப் பாண்டிப் பெருமாள் விருத்தி உரை உண்டு. சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த சிற்றுரை, பேருரை எனும் இரு உரைகள் உள்ளன. அவர் இயற்றிய பேருரையைத்தான் திராவிட மாபாடியம் என்பர். இது தருக்கமுறையிலே சிறப்பாய் அமைந்துள்ளது. இன்னும் திருவாவடுதுறை ஆதீனத்தில் வெளியான பழைய உரை ஒன்று உண்டு எனினும் இவ்வுரை எழுதுவதற்குரிய காரணம் ஒன்றுண்டு.

சைவ சித்தாந்தத்தைப் பரப்ப வேண்டும் என்ற நோக்கத் தோடு சித்தாந்தக் கலாநிதி உயர்திரு ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்களைக்கொண்டு திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்

சங்கத்தில் தத்துவ விளக்கத் தொடர் சொற்பொழிவு நிகழ்த்த ஏற்பாடு செய்யப்பட்டது. பிள்ளையவர்களை அறியாத தமிழ்மகன் இக்காலத்தில் இருக்க முடியாது. அவர் சங்க இலக்கியப்பூங்காவில் தங்கிச் சாத்திரப் பூம்பொய்கையில் மூழ்கித் திளைத்திருப்பவர்கள். இவர்கள் சங்க இலக்கியங் களுள் பலவற்றுக்கு உரை கண்டதோடு மிகப் பழைமையான இரும்புக்கடலை எனக் கருதப்பட்டு வந்ததும், சிவஞான போதத்துக்குக் காலத்தில் முற்பட்டதுமாகிய ஞானாமிர்த மூலத்தையும் உரையையும் சிவாகமங்களைக்கொண்டு ஆராய்ந்து வெளியிட்டவர்கள். இதனால், பழைமையான தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையோரால் 'சித்தாந்தக் கலாநிதி' என்ற பட்டம் கொடுக்கப்பெற்றவர். சிவஞானபோதச் சிற்றுரைக்கும் யாவரும் எளிதில் படித்து அறியத்தக்க குறிப்பும் விளக்கமும் தந்துள்ளார்கள். அவர்கள் இக்கால நிலைக்கும் இளைஞர் மன இயல்புக்கும் ஒத்த முறையில் சிவஞான தத்துவங்களை எளிமைப்படுத்தி உரைத்தது இந்தத் தத்துவ ஞானத் தொண்டுக்குச் சிறப்பளித்தது. எனவே, மாதந்தோறும் திருச்சி தமிழ்ச்சங்கத்தில் இவர்கள் நிகழ்த்திய தத்துவச் சொற்பொழிவு சிறப்பாய் அமைந்ததில் வியப்பில்லை. அச் சொற்பொழிவின் சாரமே இவ்வுரைநூலாகும். இவ்வுரையில் காணப்படும் உயர்ந்த கருத்துகள் அவருடையனவாய்க் கொண்டு, குற்றம் குறை இருக்குமாயின் அவற்றை என்னுடையனவாய்க் கருதுமாறு கேட்டுக்கொள்கிறேன். அவருக்கு மனம், மொழி, மெய் ஆகியவற்றால் எனது வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தார், தமிழுக்குச் சிறந்த தொண்டாற்றி வருகின்றனர். தமிழ் வேறு, சமயம் வேறு அன்றாதலின் தத்துவ விளக்கச் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்வதற்கு இச்சங்கம் உதவியது. பலர் கேட்டுப் பயன் அடைந்த பெருமை இத்தமிழ்ச்சங்கத்துக்கே உரியது. இவ்வுரை வெளிவருவதற்கும் இத்தமிழ்ச்சங்கமே காரணமாகும். இச் சங்கத்தார்க்கு, சிறப்பாய் அதன் அமைச்சருக்கு அடியேனுடைய நன்றி உரித்தாகின்றது. இச்சொற்பொழிவை அமைப்பதற்கு

எனக்கு உறுதுணையாய் இருந்து உதவிய திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தில் பணியாற்றிவரும் திரு. கு. விஸ்வ நாதன் அவர்களுக்கும் எனது நன்றி உரியது. தவறாது வந்திருந்து கேட்டும், வினாக்கள் எழுப்பியும் சொற் பொழிவைச் சிறப்பித்த பெருமக்களுக்கு எனது நன்றி பெரிதும் உரித்தாகும். சிறப்பாய் அரசியலிலும் நீதித்துறையிலும் கல்வித் துறையிலும் மிக்க அனுபவம் பெற்ற அறிஞர்கள் வந்திருந்து சிறப்பித்தது எனக்கு ஊக்கம் தருகிறது. திருச்சிராப்பள்ளியிலும் சுற்றுப்புறங்களில் வாழ்கின்ற உயர்கல்வி கற்ற பெருமக்களும் வந்திருந்து இச்சிவப்பணியை ஆதரவு செய்தது இறைவன் திருவருள் என்றே எண்ணி மகிழ்கின்றேன். இதனை உரிய காலத்தில் நன்முறையில் அச்சிட்டுத் தந்த தஞ்சை திருவள்ளுவர் அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகின்றது. இவ்வுரைநூலைத் தமிழுலகமும், சைவ உலகமும் பெற்றுப் பயனுறுவதாக. என்னை இவ்வருட்பணியில் ஈடுபடுத்தி ஆட்கொண்ட சிராப்பள்ளிமேவிய நன்றுடையான் திருவடியை என்றும் மறவேன்.

“சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி.”

*- ஜி. வரதராஜன்*

## ஸ்ரீலஸ்ரீ மீனாட்சிசுந்தர தேசிக சுவாமிகள் அருளிய ஆசி

*எல்லாங் கடந்த இறைவன் ஆகமம்*
*புகலும் பொருளைப் புவிதனில் உள்ளோர்*
*கண்டு தெளியக் காலமி லாமையால்*
*அருந்தவம் புரிந்து அருமறை தெளிந்த*
*புண்ணிய முனிவன் பூமியில் வந்து*
*கருணைப் பெருக்கால் காண விரும்பி*
*மெய்கண் டானென மேலோர் புகல*
*உரிமை பெற்ற உத்தம முனிவன்*
*செப்பிய நல்ல சிவஞான போதம்*
*என்றே கூறுவர் எழில்நலம் உணர்ந்தோர்*
*அந்நூற் பொருளை அறிந்த மேலோர்*
*கூறினர் உரையாய்க் கோதிலாக் கண்டென*
*அக்கா லத்தில் அமைந்த உயிர்கள்*
*கற்பூரந் தானும் கண்டதீப் போல*
*விளங்கினர் அதனால் வித்தக னருளால்*
*மும்மலம் நீங்கி முதல்வனைச் சேர்ந்தனர்*
*இக்கா லத்தில் இருக்கும் ஆன்மா*
*ஆமணக் கெண்ணெய்போல் அமைந்த படியால்*
*ஐயம் திரிபு அமைந்தவ ராவர்*
*அவர்கள் தெளிவாய் அறிவைப் பெற்றிட*
*உரைத்த நூற்கோர் உரைதனைச் செய்தனன்*
*திருக்குறள் வேளெனச் செப்புவர் நல்லோர்*
*பலநூற் பொருளைப் பல்கா லாய்ந்து*

*தெளியப் பெற்றவன் சிவனடி பூசை*
*தினந்தினம் அன்பாய்ச் செய்யும் திறத்தன்*
*ஓங்கிய ஒழுக்கம் அமைந்த உத்தமன்*
*குவலயம் புகழும் குருநமச்சி வாயன்*
*தவத்திற் காகத் தரைதனில் உதித்தவன்*
*இன்னோன் பெருமை இயம்பலும் வேண்டா*
*அவன்பெயர் வரத ராசன் என்பர்*
*வரத ராசன் வழங்கிய உரையைக்*
*கண்டவர் தெளிவாய்க் காண்பர் முதல்வனை*
*இன்னவன் உரைதான் எங்கும் விளங்குக*
*செய்தோன் வாழ்க சிறப்புடன்*
*எல்லா அன்பரும் இப்புவி வாழ்கவே.*

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டார் வரலாறு

சைவ சமய ஆசிரியர் சமய குரவர், சந்தான குரவர் என இருதிறப்படுவர். சமய குரவர், திருஞானசம்பந்தர் முதலிய நால்வர் என்பது யாவரும் அறிந்தது. இந் நால்வரும் இறைவன் தமக்குத் தம் திருவருளை வழங்கிய வாறே அந்நெறியில் நின்று, உளங்குளிர்ந்த போதெல்லாம் உவந்து வந்து, தம் அனுபவங்களைப் பாடிய தோத்திரங்கள் வாயிலாய் உலகில் சைவ சமயத்தைத் தழைத்தோங்கச் செய்தனர். சமய குரவர் நால்வரும் தனித்த நிலையில் தாம் தாம் தம் அருள்வாழ்க்கையை நடத்தினர். சந்தான குரவர் என்பவர் அவ்வாறன்றி ஒருவருக்கு மற்றொருவர் மாணாக்க ராய்த் தாம் உபதேச முறையாலும், நூல் வழியாலும் பெற்ற திருவருள் நெறி விளக்கங்களைத் தாமும் அங்ஙனமே உபதேச முறையாலும் நூல் வழியாலும் உலகிற்கு வழங்கினர். எனவே, ஞான நெறியில் இங்ஙனம் இடையறாது வழிவழியாய் வந்து விளங்கினமைபற்றி இவர்கட்குச் 'சந்தான குரவர்' என்பது பெயராயிற்று.

இத்தகைய ஞான சந்தானங்கள் நம் தமிழ்நாட்டில் பல உள. அவை அனைத்திற்கும் முதற்குரவர் திருக்கயிலை யில் வீற்றிருக்கும் சிவபெருமானே. அவரிடமிருந்து தோன்றி நிலவுலகில் வந்து விளங்கிய சந்தானங்களுள் நந்தி பரம்பரை, கந்த பரம்பரை ஆகிய இரு சந்தானங்கள் நன்கு அறியப்படுகின்றன. மற்றும் பல சந்தானங்கள் இருந்தமை யும் அறியப்படுகிறது. கைலாசபதியாகிய 'சீகண்ட பரமே' சுவரனிடத்தில் நேரே உபதேசம் பெற்ற மாணாக்கர்கள் எண்மர்' என்றும், 'அவ்வெண்மருள் தாம் ஒருவர்' என்றும் திருமூலர் கூறுகின்றார். தாயுமான அடிகள் தமக்கு உபதேசம்

செய்தருளிய மௌன குருவை, 'மூலன் மரபில் வரும் மௌனகுரு' என்று கூறுவதால், நந்தி பரம்பரையில், 'திருமூலர் மரபு' ஒன்று என்பது தெளிவாகும். எனினும், அம்மரபு இப்போது காணப்படவில்லை.

நந்தி பெருமானிடத்தில் உபதேசம் பெற்ற எண்மர்களுள் சனற்குமார முனிவர் ஒருவர். அவரது பரம்பரையே இப்பொழுது மெய்கண்ட சந்தானமாய் நம் தமிழகத்தில் நன்கு விளங்கி வருகிறது. சனற்குமார முனிவர் மரபின்படி நோக்கும்போது, அகச்சந்தானாசாரியார் நால்வர், புறச் சந்தானாசாரியார் நால்வர் என்று மரபுவழி சொல்லப் படுகின்றது. அகச்சந்தானாசாரியார் எப்பொழுதும் திருக்கைலையிலேயே இருப்பவர்கள். அவர்கள் **நந்தி தேவர், சனற்குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி மாமுனிகள்** என்னும் நால்வருமாம். புறச் சந்தானாசாரியார், திருக்கைலையில் செய்யப்பட்ட உபதேசத்தை நிலவுலகத்தில் பரவச்செய்தவர்கள். அவர்கள் மெய்கண்டார், அருள்நந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார் என்பவர். எனவே, நிலவுலகில் உள்ள சந்தான குரவருள் முதலாசிரியராய் விளங்குபவர் மெய்கண்ட தேவரே என்பது நன்கு விளங்கும். இவர் அகச்சந்தானாசாரியருள் நான்காமவ ராய்ச் சொல்லப்பட்ட பரஞ்சோதி மாமுனிகள்பால் உபதேசம் பெற்றவர். இவர் அருளிச்செய்ததே, சைவ சித்தாந்தத் தலைமணி நூலாய் விளங்குகின்ற **சிவஞான போதம்.** இவரது வரலாறு திருவருட்செயல் நிரம்பியது.

தமிழகத்தில் திருமுனைப்பாடி நாடு என்பது ஒரு பகுதி. இது சோழ நாடு, தொண்டை நாடு என்னும் இரண்டிற்கும் நடுவே இருப்பதால், நடு நாடு என்று சொல்லப்படுவது. இதன் தலைநகரம் இப்பொழுது திருக் கோயிலூர் என வழங்கும் திருக்கோவலூர். திருக்கோவலூர் சிவபெருமானது அட்டவீரட்டங்களுள் ஒன்று; அந்தகா சுரனைச் சம்கரித்த வீரச்செயலைக்கொண்டு விளங்குவது. அறுபத்துமூன்று நாயன்மார்களுள் மெய்ப்பொருள்

நாயனாரும், நரசிங்க முனையரைய நாயனாரும், இத் திருக்கோவலூரைத் தலைநகராய்க்கொண்டு திருமுனைப்பாடி நாட்டை ஆண்டனர். சங்க காலத்தில் திருமுனைப்பாடி நாடு மலையமான் திருமுடிக்காரிக்கு உரியதாய் இருந்தது. அதனால் இதற்கு மலையமான் நாடு என்ற பெயரும் உண்டு. மலையமான் நாடு என்பது மருவி மலாடு என வழங்கிற்று. சேதி நாடு என்ற மற்றொரு பெயரும் இதற்கு உண்டு.

திருமுனைப்பாடி நாடு, பழைமையாகவே, பெரியோர் பலரைத் தோற்றுவித்த பெருமையுடையது. தேவாரம் அருளிச்செய்த மூவருள் திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் இருவர் அவதரித்த நாடு திருமுனைப்பாடி நாடே; இதனைச் சேக்கிழார்,

**"மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைதிகழ்**
**அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்**
**பிறந்தருள உளதானால் நம்மளவோ பேருலகில்**
**சிறந்ததிரு முனைப்பாடி திறம்பாடும் சீர்ப்பாடு"** *(1281)*

என்று வியந்து போற்றுகின்றார். இத்திருமுனைப்பாடி நாட்டில் திருப்பெண்ணாகடம் என்பது ஒரு சிறந்த திருத்தலம். திருநாவுக்கரசருக்குச் சிவபெருமான் இடபக் குறியையும் சூலக்குறியையும் பொறித்தருளிய தலம் இதுவே.

இத்திருத்தலத்தில் அச்சுதகளப்பாளர் என்னும் சைவ வேளாண் பெருமகனார் ஒருவர் இருந்தார். இவருக்கு நீரும் நிழலும், நிலமும் பொதியும் நெற்கட்டும், பேரும் புகழும் பெருவாழ்வும் ஆகிய செல்வங்கள் மிக இருந்தும் மக்கட் செல்வம் இல்லாதிருந்தது. அதனால் இவர் நோன்புகள் பல நோற்றும், அறங்கள் பல செய்தும் இறைவனை வேண்டியிருந்தார். ஆண்டுகள் பல சென்றும் மகப்பேறு வாய்த்திலது. அதனால் வருத்தமுற்ற அச்சுத களப்பாளர், தம் குலத்துக்கெல்லாம் குருவாகிய திருத்துறையூர்ச் சகலாகம பண்டிதராகிய சிவாசாரியாரை அடைந்து

வணங்கித் தம் குறையைத் தெரிவித்துக்கொண்டார். சகலாகம பண்டிதர், "உமது மகப்பேறுபற்றிய திருவருட் செயலை அறிவோம்" என்று சொல்லி, வழக்கப்படி தமது நித்திய கடன்களை முடித்துச் சிவ பூசையினையும் செய்து முடித்த பின்னர்த் தேவார திருமுறையைப் பூசித்து, அதில் அச்சுதகளப்பாளரைக் கயிறு சாத்தும்படி சொல்ல, குரு ஆணையின்படி அச்சுத களப்பாளர் திருமுறையில் கயிறு சாத்தினார். அப்பொழுது திருஞானசம்பந்தரது தேவாரத்தில் அரியதொரு திருப்பாடல் உதயமாயிற்று.

**"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ளம்நினை**
**வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாஒன்றும்**
**வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்**
**தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"**

என்பதே அத்திருப்பாடல். 'கண்காட்டு நுதலானும்' என்னும் திருவெண்காட்டுத்திருப்பதிகத்தில் இரண்டாவதாய் உள்ள இத்திருப்பாடல் அச்சுதகளப்பாளரது மனக்குறைபற்றிய தீர்வினைத் தெளிவாய் அறிவிப்பதாய் இருத்தல் கண்ட சகலாகமபண்டிதர் அகம் மிகமகிழ்ந்து, "திருவெண் காட்டுக்குச் சென்று, அங்குள்ள முக்குள நீரில் முழுகி, நாள்தோறும் திருவெண்காட்டுப்பெருமானை வணங்கினால் உமக்கு மகப்பேறு உண்டாதல் உறுதி" என்று கூறினார்.

அச்சுதகளப்பாளர் அங்ஙனமே தம் மனைவியாருடன் திருவெண்காட்டிற்குச் சென்று, முக்குள நீரில் முழுகித் திருவெண்காட்டுப்பெருமானை வழிபட்டிருந்தார். ஒரு நாள் இரவு அவரது கனவில் சிவபெருமான் தோன்றி, "அன்பனே, உனக்கு இப்பிறப்பில் மகனைப் பெறும் புண்ணியம் இல்லை; ஆயினும், ஞானசம்பந்தனது வாக்குப் பொய்யாதவாறு, அவனைப் போலவே ஒரு மகனை உனக்குத் தருகின்றோம்" என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார். அச்சுதகளப்பாளர் விழித்தெழுந்து, வியப்பும் அச்சமும் எய்தி, நிகழ்ந்ததை மனைவியாருக்கும் தெரிவித்து, முன்போலவே திருவெண்காட்டீசரை வழிபட்

டிருந்தார். இறைவன் திருவாக்கின்படியே அச்சுதகளப்பாளர் தம் மனைவியார் வயிறு வாய்ப்ப, அதனையறிந்து திங்கள்தோறும் செய்தற்குரிய சடங்குகளை முறையே செய்துவரப் பத்தாம் திங்களில் நல்லதொரு நாளில் அம்மையார் அரியதோர் ஆண்மகவைப் பெற்றார்.

அச்சுதகளப்பாளர் அளவிலா மகிழ்ச்சியடைந்து சாதகன்மம் முதலியவற்றைச் செய்து, 'சுவேதவனப் பெருமாள்' (வெண்காட்டிறைவன்) என நாமகரணம் செய்து, பலர்க்கும் தானங்கள் பல வழங்கிப் பெண்ணாகடம் அடைந்து திருமகனாரை மிகச்சீரும் சிறப்புமாக வளர்த்தார். சுவேதவனப்பெருமாளுக்குத் தாய்மாமனார் திருவெண்ணெய்நல்லூரில் வாழ்பவர். அவர், தம் உடன்பிறந்தாளுக்கு அருமையாய்ப் பிறந்த ஆண் மகவைத் தாயுடன் தம் இல்லத்துக்குக் கொண்டுசென்று வளர்த்தார்.

சுவேதவனப்பெருமாள் சாமுசித்தராய் அவதரித்த காரணத்தால் மற்றைய குழந்தைகள் போல் ஓடியும் ஆடியும், சிறு குறும்புகள் செய்தும், மழலை மொழி பேசியும் வளராமல் உலகத்தொடர்பே இன்றி மௌன நிலையிலே வளர்ந்தார். எனினும், அவர் ஊமையராய் இல்லை. உலகியலுக்கு வேறுபட்டுத் தோன்றிய காரணத் தால், பெற்றோரும் மற்றோரும் சிறிது மனக்கவலையுற்று, சுவேதவனப்பெருமாளைத் திருவெண்ணெய்நல்லூர்ப் பொல்லாப்பிள்ளையாரது திருமுன்பில் கொண்டுபோய் விட்டு வேண்டிக்கொண்டனர். சுவேதவனப்பெருமாளும் பொல்லாப்பிள்ளையாரை வழிபட்டு மௌன நிலையில் இருந்தனர்.

அவ்வாறு இருக்கையில், திருக்கைலையிலிருக்கும் பரஞ்சோதி மாமுனிகள் பொதிகை மலையிலுள்ள அகத்திய முனிவரைக் காணவேண்டி வான் வழியாய்ச் சென்றார். அப்பொழுது, திருவெண்ணெய்நல்லூருக்கு அருகே வரும்பொழுது, அங்கு சாமுசித்தர் ஒருவர் இருப்பதை அறிந்து, கீழே இறங்கி வந்து, தமக்கு நந்திதேவர் வழியில்

கிடைத்த உபதேசத்தைச் சுவதேவனப்பெருமாளுக்குச் செய்து, மெய்கண்டார் என்று · தீட்சா நாமம் சூட்டிச் சென்றார். மெய்கண்டார் என்பது, பரஞ்சோதி மாமுனிகட்கு ஆசிரியர் பெயராகிய சத்திய ஞானதரிசினிகள் என்பதன் மொழிபெயர்ப்பேயாகும்.

மெய்கண்டார், நந்தி பரம்பரை உபதேசத்தைப் பெற்று அதனைப் பொல்லாப்பிள்ளையார் திருமுன்பிருந்து சிந்தித்துத் தெளிந்து, நிட்டை கூடிச் சிவானுபூதிச்செல்வராய் விளங்கினார். திருஞானசம்பந்தரைப் போலவே மெய் கண்டார் ஈராண்டிலே சிவஞானம் பெற்றுயர்ந்த நிலையைக் கண்ட பெற்றோரும் மற்றோரும் பெருமகிழ்ச்சியுற்றனர். பின்னர், மெய்கண்டார் தமிழுலகம் உய்ய வேண்டிச் சிவஞான போதம் என்னும் அரிய நூலை அருளிச்செய்து, அதற்கு வார்த்திகப்பொழிப்பும் உரைத்தருளி மாணாக்கர் களுக்கு அது வாயிலாகச் சிவஞானத்தை விளக்கிச் சைவ சித்தாந்த ஞானபானுவாய் விளங்கினார்.

இஃது இவ்வாறு இருக்கையில், அச்சுதகளப்பாளர் குல குருவாய் முன்னர்த் திருமுறையில் கயிறு சாத்துவித்த திருத்துறையூர்ச் சகலாகம பண்டிதர் என்னும் சிவாசாரியர், தம் மாணாக்கர் அச்சுதகள்ப்பாளருக்குத் தாம் சொல்லிய வாறே ஆண் மகவு பிறந்து சிறப்பெய்தி இருந்தும், தம்மை வந்து வணங்கவில்லை என்று மனத்தில் சிறிது மாறுபாடு கொண்டு, சைவ வேளாண் மக்கள் இல்லத்திற்குச் சிற்சில வேளைகளில் தாமே செல்வதுபோலத் திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்றார். பலர் அவரை எதிர்கொண்டு வணங்கினார்கள். அப்பொழுதும் மெய்கண்டார் அங்கு வராமையைக் கண்டு, தாமே அவர் இருக்கும் பொல்லாப் பிள்ளையார் சந்நிதிக்குச் சென்றார். அங்கு மெய்கண்டார் இனிது வீற்றிருந்து, மாணாக்கர்களுக்குச் சித்தாந்தத்தை அருளிச் செய்துகொண்டிருந்தார். இருந்தவர் எழுந்து வந்து தம்மை வணங்காமையைக் கண்ட சகலாகம பண்டிதர் சிறிது சினங்கொண்டு, அப்பொழுது மெய்கண்டார் அருளிச் செய்துகொண்டிருந்த ஆணவ மலத்தின் இயல்புபற்றி

அவரை வினவுவாராய், "ஆணவத்தின் சொரூபம் யாது?" என்று சிறிது கடுமையாய்க் கேட்டார். மெய்கண்டார் சகலாகம பண்டிதர்மீது தமது திருநோக்கத்தைச் செலுத்தித் தமது சுட்டுவிரலால் இவரையே சுட்டிக்காட்டினார். எனவே, 'உம்மிடத்தில் காணப்படுகின்ற இதுதான் ஆணவத்தின் சொரூபம்' என்பதே அதன் பொருள் என்பது சொல்ல வேண்டுவதில்லை. மெய்கண்டாரது திருநோக்கத் தாலும் திருக்குறிப்பாலும் ஆணவ மலம் அடியோடு நீங்கப் பெற்ற சகலாம பண்டிதர், 'இவரே நம்மை ஆட்கொள்ள வந்த குருமூர்த்தி' என்று நினைந்து, அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "அடியேனது பிழையைப் பொறுத்து ஆட்கொள்ளவேண்டும்" என்று வேண்டினார்; அங்ஙனமே மெய்கண்டார் அவரைத் தம் மாணாக்கருள் முதல்வராய்க் கொண்டு, உண்மை ஞானத்தை அளித்து, அருள் நந்தி எனத் தீட்சா நாமமும் சூட்டித் தாம் அருளிய சிவஞானபோத நூலை விரித்து வழிநூல் செய்யுமாறு கட்டளை இட்டு அருளினார். அங்ஙனமே அருள்நந்தி சிவாசாரியார் சிவஞான சித்தி என்னும் விரிந்த வழிநூலைச் செய்து, சிவஞான போதத்தின் பொருளை யாவரும் இனிது விளங்கச்செய்தார். ஆகவே, அவர் வழியாய் மெய்கண்ட சந்தானம் இந்நில வுலகில் இன்றும் நின்று நிலவுகின்றது.

மெய்கண்ட தேவநாயனார் இங்ஙனம், திருவதிகை மனவாசகங்கடந்தார் முதலிய மற்றும் மாணாக்கர் பலர்க்குச் சிவஞானத்தை வழங்கி, அவர்கள் வாயிலாய்ச் சித்தாந்த ஞானம் எங்கும் பரவச்செய்து, ஓர் ஐப்பசித் திங்கள் சுவாதி நட்சத்திரத்தில் சிவபோத பெருவாழ்வு எய்தினார். மெய்கண்டாரது பெருமையை உணர்ந்து அவரைத் தியானிப்பவர்கட்கு இன்றும் ஐயம் திரிபுகள் அற்ற சிவஞானம் சித்திப்பது திண்ணம்.

மெய்கண்ட தேவநாயனாரது காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

***மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.***

## பதிப்புரை

நிறையச் செய்திகளைத் தெரிந்துகொள்ளல் அறிவாகாது. அது, செய்தி அறிந்த தன்மையாகும். அதைக் கருவியாகக் கொண்டு அனுபவத்தால் உணர்வதையும் இணைத்துச் சிந்தித்துத் தெளிவு பெறலும் அதன்படி நடத்தலுமே உண்மை யான அறிவு. இது கற்றறிந்தவற்றின் தாக்கமாக ஒருவர் உள்ளத்தில் தோன்றும் கருத்துமின்னலாகும். பிறர்மூலம் தெரிந்து தேக்கிக்கொள்வதைக் குளத்திற்கும், சிந்தனைப் பயனாய் ஒருவர் உள்ளத்தில் தோன்றுவதை ஊற்றுக்கும் ஒப்பாகக் கூறுவர்.

அப்படி அறிவால் அறியப்படுவனவற்றுள் தலையாயது, இறைபற்றிய அறிவே - கற்றதனாலாய பயன் வாலறிவன் நற்றாள் தொழலாகும். இறைபற்றிய அறிவைத் தரும் சைவப் பனுவல்களுள் சாலச் சிறந்தது, சிவஞானபோதம். அது சிவனைப்பற்றிய அறிவைக் கொடுக்கும் அறிவு நூல். இங்கே சிவஞானபோதம் என்ற நூலின் பெயர்தான் 'அறிவின் அறிவு' எனப் புதுப்பெயர் கொள்கிறது. சொற்களில்தாம் வேறுபாடே தவிரப் பொருளில் மாறுபாடு இல்லை.

திருக்குறள்வேள் ஜி. வரதராஜன் அவர்கள் எழுதிய சிவஞானபோத விளக்கவுரைதான் இந்தப் புதுப்பெயரில் இப்போது வெளியிடப்படுகிறது. அவர்களின் உரையில் எத்தகைய மாறுபாடும் செய்யப்படவில்லை. உரைவிளக்கப் பகுதிகள், படிப்போர் உள்ளத்தில் எளிய முறையில் பதிந்து, என்றும் நிலைத்திருக்கும்வண்ணம் எழுதப்பட்டுள்ளன.

தமிழர்க்கு இருகண்கள் போன்றவை, சைவமும் தமிழும். இவ்விரு துறைகளிலும் நுண்ணிய நூலறிவும் அனுபவ அறிவும் கொண்டவர், திருக்குறள்வேள் ஜி.வரதராஜன்

அவர்கள். அவர் எழுதி எங்கள் வெளியீடுகளாய் வந்துள்ள 'திருக்குறள் - உரைவிளக்கம்', 'திருவாசகம் - விரிவுரை', 'திருமந்திரம் - விரிவுரை' (மூன்று தொகுதிகள்) ஆகிய நூல் களைக் கற்றுக் கழிபேரின்பம் கொள்ளாதார் தமிழ்கூறும் நல்லுலகில் மிகச்சிலரே எனலாம். அப்பெருமகனார் எழுதிய 'அறிவின் அறிவு - சிவஞானபோதம்' என்னும் நூலை இப்போது உங்கள் முன் படைப்பதில் பெருமை கொள் கிறோம். 'அறிவின் அறிவான சிவஞானபோதம்' உங்கள் அறிவிற்கு விருந்தாய் அமையும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

- பழனியப்பா பிரதர்ஸ்

# உள்ளே....

உ

திருச்சிற்றம்பலம்

## மங்கல வாழ்த்து

**கல்லால் நிழல்மலை**
**வில்லார் அருளிய**
**பொல்லார் இணைமலர்**
**நல்லார் புனைவரே.**

**முடிபு :** மலைவில்லார் அருளிய பொல்லார் இணை மலர் நல்லார் புனைவர்.

**பதப்பொருள் :** கல் ஆல் நிழல் - கல்லால மரத்தின் நிழலின்கண் இருந்து; மலைவு இல்லார் - மலைவுற்று வந்த மாணாக்கருக்கு அஃது இல்லாதபடி ஞானம் அருளிய பெருமான்; அருளிய - உலகவர் வழிபட்டு உய்யுமாறு தோற்றுவித்த; பொல்லார் - பொல்லாப்பிள்ளையாருடைய; இணைமலர் - இரு திருவடிகளை, நல்லார் - சிவஞானிக ளாகிய நல்லோர், புனைவர் - தலைமேல் சூடி வழிபடுவர்.

**விளக்கம் :** மலைவாவது, ஒன்றினொன்று மாறுபடு கின்ற சமய நூல்களைப் பயிலுமிடத்துத் தோன்றும் ஐயம், திரிபு. ஞானாசிரியன் அறிவுரையாலன்றி மலைவு தீர்தற்கு வாயில் இல்லாமையால், சிவபரம்பொருளே கல்லால மரத்தின்கீழிருந்து, ஆசிரியர் கோலத்தில் தோன்றி, சனகாதி முனிவர் நால்வருக்கு ஞான விளக்கம் நல்கினார். இதனை, 'கல்லால் நிழல் மலை வில்லார்' என்கிறார். தாம் ஒரு ஞானநூல் எழுதுகின்றாராதலின், ஆசிரியர் ஞானம் நல்கிய பரம்பொருளைக் காப்புச்செய்யுளில் குறிப்பிடுகின்றார்.

**"நன்றாக நால்வர்க்கு நான்மறையின் உட்பொருளை**
**அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ"**

என்று, சனகாதி முனிவர்க்குப் பெருமான் அறமுரைத்ததை மாணிக்கவாசக அடிகளின் வாக்கால் உணரலாம்.

'பொள்ளார்' என்றது, 'பொல்லார்' எனத் திரிந்தது. பொள்ளார் என்பது, உளியினால் செதுக்கப்படாது, தானே தோன்றியவர் என்னும் பொருளது. திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளிய விநாயகப்பெருமானது பெயர் பொல்லாப்பிள்ளையார் என்பது. ஆசிரியர் மெய்கண்டார் ஞானம் பெற்ற இடம் திருவெண்ணெய்நல்லூராதலின், அங்கு எழுந்தருளிய விநாயகப்பெருமானை வழிபடு கின்றார். சிவபரம்பொருள் விநாயகப்பெருமானை அருளிச் செய்தது கயமுகாசுரனை அழித்தருளும்பொருட்டு என்பது புராண வரலாறு.

'இணைமலர்' என்றது, விநாயகப்பெருமானது திருவடிகள் இரண்டையுமாம். அவை ஞானம், கிரியை என்பன. ஞானத்தால் உலகத்தை நோக்குவதும், கிரியையால் அதனை நடத்துவதும் ஆகிய இரண்டும் நடைபெறுகின்றன. இதுபற்றியே திருவடிகள் இரண்டனையும் 'இணைமலர்' என்று குறிக்கின்றார்.

மக்கள் பெறும் நலன்களுள் சிவஞானத்தின் மிக்க நலம் ஒன்று இல்லை; ஆதலின், சிவஞானம் பெற்றோரை 'நல்லார்' என்று உரைக்கின்றார். திருவடியை 'மலர்' என்றதற்கேற்ப வழிபடுவர் என்னாது 'புனைவர்' என்கிறார். ஏ, அசை.

**கருத்து :** ஞானியர் விநாயகரது திருவடியைப் புறத்தே தலைமீதும் அகத்தே நெஞ்சத்தும் வைத்து வழிபட்டுத் தமது ஞானவாழ்வை நடத்துவர் என்பதாம்.

## முதற்சூத்திரம்

**அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்.**

***முடிபு :*** அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளது ஆம்; அந்தம் ஆதி என்மனார் புலவர்.

***பதப்பொருள் :*** அவன் அவள் அது எனும் அவை - ஆண்பாலும் பெண்பாலும் ஒன்றன்பாலுமாய்ப் பகுக்கப் பட்ட உலகுயிர்த்தொகுதி; மூவினைமையின் - தோன்றல் நிற்றல் அழிதல் ஆகிய முத்தொழில் உடையதாய் இருப்ப தால்; தோற்றிய திதியே - ஒருவனால் தோற்றுவிக்கப்பட்ட உள்பொருளேயாம்; ஒடுங்கி மலத்து உளதாம் - அத்தொகுதி ஒடுங்கி, மலம் காரணமாய் மீளவும் உளவாம்; அந்தம் ஆதி - ஒடுங்குதற்குக் காரணமாய் இருந்த அப்பரம்பொருளே மீளத் தோன்றுதற்கும் காரணமாயுள்ள முதலாம்; என்மனார் புலவர் - என்று சொல்லுவர், அறிஞர்.

***கருத்து :*** உலகுயிர்த்தொகுதி தோன்றுதல் முதலிய முத்தொழில் உடையது என்பதும், அதற்கு முதல்வன் ஒருவன் உண்டு என்பதும், அவன் அத்தொழிலைச் செய்தற்குக் காரணம் உயிரிடத்தே ஒன்றியிருக்கும் மலத்தை நீக்குதல்பொருட்டு என்பதும் கூறப்பட்டன.

# 1. கடவுள் இருப்பு

உலகிலே காணப்பட்ட எல்லாப் பொருள்களும் 'அவன், அவள், அது' என்னும் முப்பிரிவில் அடங்கும். அவன், அவள் என்பவை, உயர்திணைப்பொருளையும், அது என்பது அஃறிணைப்பொருளையும் குறிக்கும். மக்கள் தேவர் உயர்திணை; அவரொழிந்த விலங்கு முதலிய உயிருடைப் பொருளும் நிலம், நீர் முதலிய உயிரில்லாப் பொருளும் அஃறிணையாம். உயிர்ப்பொருளும் அதற்குரிய உடம்பும் உலகமும் அடங்க அவை என்று கூறுகின்றார். இவ்வடிக்கு உரை எழுதுவார் போன்று ஆசிரியருக்கு முதல் மாணாக்கராகிய அருள்நந்தி சிவம்,

**'ஒருவனோடு ஒருத்தி ஒன்றுஎன்று**
**உரைத்திடும் உலகம் எல்லாம்'**

என்று சிவஞான சித்தியாரிலே கூறுகிறார்.

'மூவினைமை' - முன்னர்க் கூறப்பட்ட உலகுயிர்த் தொகுதிகள் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகிய மூன்று தொழிலையும் உடையதாதல். ஆணும் பெண்ணுமாகிய மக்கள் பிறந்து, சில ஆண்டுகள் இருந்து பின்னர் மடிவது காணக்கிடக்கிறது. இது போன்று ஏனைய எல்லா உயிரும் உடம்பொடு தோன்றி, நின்று, மறைகின்றன. இனி, நிலம், நீர் முதலிய உயிரிலாப்பொருள்களும் தோன்றி, இருந்து, மறைவதும் அறியப்படுகின்றது. லெமூரியாக்கண்டம் பாரதத்தின் தென்பகுதியில் இருந்ததும், பின்னர் அதனைக் கடல் கொண்டதும் நூல்கள் வாயிலாய் அறியக் கிடக்கின்றன. எனவே, முத்தொழில் உடைத்தாதல் உலகுயிர்த் தொகுதியின் தன்மை என்பது புலனாகிறது. ஆதலில் ஆசிரியர், 'அவை மூவினைமையின்' என்று கூறுகிறார்.

இனி, நாற்காலி, குடம் முதலிய பொருள்களில் தோற்றம், இருப்பு, அழிவு ஆகிய மூவினைமை காணப்படு கின்றது. இவை செய்யப்பட்ட பொருள்கள், செயற்கைப் பொருள்கள் என்பதும், இவற்றைச் செய்வதற்குக் கருத்தா உண்டு என்பதும் உணரப்படுகின்றன. அதுபோல, முத் தொழிற்படுவதால் உலகுயிர்த்தொகுதியில் தோற்றுவிக்கப் பட்ட செயற்கைப்பொருள் என்பதும், அவற்றைத் தோற்று வித்தற்கு ஒரு கருத்தா உண்டு என்பதும் தானே போதரும். ஆதலால், ஆசிரியர், தோன்றிய என்னாது 'தோற்றிய' என்று கூறுகிறார். எனவே, முத்தொழிற்படும் உலகுயிர்த் தொகுதிக்கு முதல்வன் ஒருவன் வேண்டும் என்பதாம். வழி நூலாசிரியராகிய அருள்நந்தி சிவம்

**'வருமுறை வந்துநின்று போவதும் ஆதலாலே**
**தருபவன் ஒருவன் வேண்டும்'**

என்கிறார்.

தோற்றுவிக்கப்பட்ட உலகுயிர்த்தொகுதி அப்படியே அழிந்தே ஒழியாது, ஒடுங்கி மீளத் தோன்றுவானேன்? உயிர்களை அநாதியே பற்றியிருக்கிற மல இருளைப் போக்குதற்பொருட்டு உடம்பும் உலகமும் படைக்கப் பட்டன. மல இருள் நீங்குதற்குரிய பக்குவம் உயிர் எய்துவதற்குள், உடம்பும் உலகமும் நிற்கமாட்டாது அழிந்து விடுகின்றன. ஏனெனில், அவை செயற்கைப்பொருள்களே தவிர உயிர்போல இயற்கைப்பொருள்கள் அல்ல. மேலும், மல நீக்கத்துக்குத் துணை புரிவன உடம்பும் உலகமும் தவிர வேறு பொருளும் இல்லை. அதனால் அவை மீளவும் உளவாதல் வேண்டியுள்ளன. ஆதலின், 'ஒடுங்கி மலத்து உளதாம்' என்கிறார். 'அவன் அவள் அது எனும் அவை' உளவாதற்குக் காரணம், மலம் என்பதாம்.

மலம் என்பது, அறிவு வடிவாகிய உயிரோடு அநாதியே கலந்து அறியாமையைச் செய்வதோர் இருள். அது செம்பிற்களிம்பு போலவும், ஒளிக்குள் இருள் போலவும் உயிரோடு ஒன்றியிருப்பது. அறிவு வடிவான உயிரோ எப்பொழுதும் நேர்மை தவறாமல் தூய வழியில்

செல்லும் இயல்புடையது. இம்மலம், அறிவை மறைத்துக் குற்றத்துக்கு உள்ளாக்குகிறது. .

**"தூய நினைவைத் தூமொழியைத் தூயசெயலைத் தோற்றாது தீய நினைவைத் தீமொழியைத் தீய செயலைத் தவத்தோற்றும் மாய ஆணவப் பகை"**

என்று கச்சியப்ப முனிவர் தணிகைப்புராணத்தில் கூறுகின்றார். அஃது எப்படி எனில், நிகழ்ந்ததை மறக்கச் செய்வதும், நிகழப்போவதை அறியவொட்டாமல் மறைப்பதும் மலத்தின் செயல். அதனால் உயிர், அறிவு தடைப்பட்டுக் குற்றத்தைச் செய்கிறது.

இனி, ஒடுங்குகிற உலகத்தொகுதிக்கு ஒடுங்கும் இடம் யாது? இடம், காலம் என்பன உலகுக்கே யன்றி உலகுக்கு அப்பாற்பட்ட இடத்தில் இல்லை. இக்கால விஞ்ஞான நூல்களும் நிலவுலகுக்கு அப்பாற்பட்ட பகுதியில் காலம், இடம் என்பன இல்லை என்று கூறுவது நினைவுகொள்ளத்தக்கது. ஆனால், அவை ஒடுங்குதற்கு இடம் வேண்டும். அவ்விடத்தை 'ஒடுங்கி' என்றும், அவை மீளத் தோன்றும்போது அவ்வொடுங்கியினின்றும் உளவாம் என்றும், ஒடுங்கியைப் பெயராக்கிப் பொருள் கூறுவர், சிவஞான முனிவர்.

உலகத்தொகுதியை ஒடுக்குபவனும் அவற்றை மீளத் தோற்றுவிப்பவனும் ஒருவனே ஆகும். அதுபற்றியே அவனை, 'அந்தம் ஆதி' என்று கூறுகின்றார். அந்தத்தைச் செய்யும் பெருமானே ஆதியாயும் உள்ளான் என்ற கருத்துப் புலப்பட 'அந்தம் ஆதி' என்று கூறிய நயம் அறிந்து போற்றத்தக்கது. அருள்நந்திசிவம், 'தான்முதல் ஈறுமாகி' என்றதையும் ஒப்பு நோக்குக. உலகத்தொகுதிக்குப் படைத்தலையும் அழித்தலையும் கூறினமையால், காத்தலையும் செய்வான் முதல்வன் என்பது சொல்லாமலே பெறப்படும். முதல்வனின் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களும் உலகு, உடம்பு ஆகியவற்றுக்கு உரியன என உணர்க. இனி, முதல்வனால் உயிருக்குச் செய்யப்படுவன மறைத்தலும் அருளலுமாம். படைத்தல் முதலிய ஐந்தையும் முதல்வனின் ஐந்தொழில் என்று ஞான நூல்கள் கூறும்.

## இரண்டாவது சூத்திரம்

**அவையே தானே ஆய்இரு வினையின்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.**

***முடிபு :*** (அவன் அவள் அது எனும் அவை) இருவினையின் போக்கு வரவு புரிய, அந்தம் ஆதியாகிய முதல்வன் அவையேயாய், தானேயாய் அவையே தானேயாய், ஆணையின் நீக்கம் இன்றி நிற்கும்.

***பதப்பொருள் :*** இருவினையின் - (முதற்சூத்திரத்தில் அவன் அவள் அது என்று குறிக்கப்பட்டவற்றுள் உயிர்த் தொகுதிகள் தாம் செய்யும்) இருவினை காரணமாய்; போக்கு வரவு புரிய - இறத்தலும் பிறத்தலும் ஆகிய தொழில்களைச் செய்யாநிற்க; அவையேயாய் - (அந்தமாதி யாகிய முதல்வன்) உடம்பும் உலகுமாகிய பொருள்களோடு கலந்து ஒன்றாய்; தானேயாய் - தான் அவற்றின் வேறாய்; அவையே தானேயாய் - உயிர்த்தொகுதியும் தானும் உடனாய்; ஆணையின் - ஆணையாகிய சிற்சக்தியோடு; நீக்கமின்றி நிற்கும் - நீங்குதல் இல்லாமல் இருப்பன்.

***கருத்து :*** முதல்வன் ஆணையோடு நின்று உயிர்கட்கு இருவினைப்பயனை நுகர்விப்பன் என்பது கூறப்பட்டது.

## 2. மும்மலங்களின் இருப்பு

முதற்சூத்திரத்தில் "அவை மலத்து உளதாம்" என்ற ஆசிரியர், இச்சூத்திரத்தில் அவை, "இருவினையின் போக்கு வரவு புரிய" என்கிறார். வினை செய்தற்குரியன உயிர்களே யாதலின், உயிர்த்தொகுதி மட்டும் இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. உடம்பும் உலகமும் மல நீக்கத்தின் பொருட்டு உயிருக்குத் துணை செய்ய வந்தன.

மலம் காரணமாய்ப் பிறவியில் செலுத்தப்பட்ட உயிர் வினையைச் செய்கின்றது. ஏன் எனில், வினையாலன்றி மலம் நீங்குதற்கு வழியில்லை. வினையால் மலநீக்கமும், மலநீக்கத்தால் ஞானமும் உண்டாகின்றன. இவ்வினை யானது நல்வினை, தீவினை என இருவகைப்படும். இரண்டுமே பிறப்புக்குக் காரணமாம்.

"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது' என்று சாத்தனாரும் கூறுகிறார். நல்வினையும் தீவினையும் ஆகிய இரண்டும் பொன் விலங்கும் இருப்பு விலங்கும்போலத் தளை செய்வன. ஆதலின், திருவள்ளுவ நாயனார், இருவினையை, "இருள்சேர் இருவினை" என்கிறார். அவர் இருள் என்றது, மலத்தை. மாணிக்கவாசக அடிகள், "அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி" என்றதும் இக் கருத்துப்பற்றியேயாம். உயிர்கள் வினைக்கேற்ப இறத்தலை யும் பிறத்தலையும் செய்யும். ஆதலால், "இருவினையின் போக்குவரவு புரிய" என்கிறார்.

"அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்ல" என்று அருள்நந்திசிவம் கூறியதையும் ஒப்பிட்டுக் காண்க.

**"ஞானமுடன் இச்சைதொழில் நண்ணியிட அதனால்,**
**நானாபோ கங்களையும் நாடிநான் என்னும்**
**மானமதால் இருவினையும் வளர்ந்திடவே அதனால்**
**வானமொடு பூமிகீழ் மருவிப் போந்தே"**

என்று சிவாக்கிரக யோகியர் தாம் செய்த சிவநெறிப் பிரகாசத்தில் வினையால் பிறப்புப் பெருகுவதை விரிவாய்க் கூறுகின்றார்.

முதற்சூத்திரத்தில் உண்டு என்று நிறுவப்பட்ட அந்தமாதியாகிய முதல்வன் எங்கே உள்ளான்? முதற் சூத்திரத்தில் அவை என்ற சொல்லால் குறிக்கப்பட்ட உயிர்ப்பொருள் உயிரில் பொருளாகிய இரண்டனுள், உயிரில் பொருளில் முதல்வன் **'ஒன்றாய்'** இருக்கின்றான். அதனால், "அவையேயாய்" என்று கூறுகின்றார். உயிர்ப் பொருளோடு எங்ஙனம் உள்ளான் எனில், உயிர்ப் பொருளோடு **'உடனாய்'** இருக்கிறான். இதனை, அவையே, "தானேயாய்" என்று கூறுகிறார். இவ்விரண்டுமன்றி வேறு தனிநிலை முதல்வனுக்கு இல்லையோ என்ற ஐயம் நிகழாவண்ணம், இவ்விரண்டின் **வேறாய்த்** தனித்தும் இருக்கும் நிலை உண்டு என்பதை உணர்த்த 'தானேயாய்' என்றும் இச்சூத்திரத்தில் முதல்வன் இருக்கும் இடம் கூறுகிறார். முதல்வன் இவ்வாறு ஒன்றாயும் உடனாயும் வேறாயும் இருப்பதற்குக் காரணம் உண்டு. ஓர் ஒழுங்குக்கும் அளவுக்கும் வரம்புக்கும் உட்பட்டு இருக்கும் பொருட்டே உயிரில்லா உலகியல் பொருளோடு கலந்து ஒன்றாய் இருக்கிறான். இங்ஙனம் இல்லாவிடில் உயிர்கட்கு வாழ்வு இல்லை; ஞானமும் விளையாது. உயிர்ப் பொருளுக்கு வினைப்பயனை ஊட்டும்பொருட்டும், மலத்தால் மறைப்புண்டிருத்தலால் அவ்வப்போது உணர்வு நல்கும்பொருட்டும், அவ்வுயிர்களோடு உடனாய் இருக் கிறான். இனி, உலகுக்கு அந்தத்தைச் செய்யும்பொருட்டும், மீளவும் படைத்தற்பொருட்டும் வேறாய் இருக்கிறான். 'அவையேயாய், தானேயாய்' என்றது, அவையேயாய்,

தானேயாய், அவையே தானேயாய் என்று விரித்துப் பொருள் கொள்ளப்பட்டது.

**"ஒருவனே எல்லாமாகி அல்லனாய் உடனுமாவன்"**

என்ற சித்தியாரையும் காண்க.

**"ஈறாய்முதல் ஒன்றாய் இருபெண்ணாண் குணமுமூன்றாய்**
**மாறா மறைநான்காய் வருபூதம் அவைஐந்தாய்**
**ஆறாய்சுவை ஏழோசையோ டெட்டுத் திசைதானாய்**
**வேறய் உடன்ஆனான் இடம் வீழிம்மிழலையே"**

என்ற திருஞானசம்பந்தரின் அருள்வாக்கினாலே முதல்வன், ஈறாய் வேறாய் உடனாய் இருக்கிறான் என்பதை உணரலாம்.

முதல்வன் இருவினைப்பயனை நேரே உயிர்கட்கு ஊட்டாது ஆணையாகிய தனது சிற்சக்தியால் ஊட்டுகிறான். வினையோ அறிவில்லாதது; உயிரோ தான் செய்த வினைப்பயனை அறிந்து ஏற்றுக்கொள்ளாது. ஆதலால், இவ்விரண்டையும் சேர்த்து நுகர்விப்பது ஆணையேயாம். ஆணை என்பது, முதல்வனது சிற்சக்தியே, முதல்வன் வேறு, சத்தி வேறு என்பது அன்று. நெருப்பும் அதன் சுடுதல் சக்தியும், சூரியனும் அதன் ஒளியும் போன்று ஒன்றினொன்று பிரிக்க முடியாதது. ஆதலின், "ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" என்கிறார்.

## மூன்றாவது சூத்திரம்

**உளதுஇல தென்றலின் எனதுடல் என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்**
**உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.**

**முடிபு :** மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது.

**பதப்பொருள் :** இலது என்றலின் ஆன்மா உளது - உள்பொருள் ஒன்றுக்குத்தான் உண்டு அல்லது இல்லை என்று சொல்லும் வழக்கு உண்டு. ஆதலால், இலது என்றவிடத்து ஆன்மா உள்ளது; எனது உடல் என்றலின் ஆன்மா உளது - உடம்பை வேறாய் வைத்து எனது உடல் என்று உடையதும் உடைமையுமாய்க் கூறுதலால் உடம்புக்கு வேறாய் உடையதாகிய ஆன்மா உள்ளது; ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது - ஐம்புலன்களையும் ஐம்பொறிகளின் வயிலாய்க் கவர்ந்து அறியும் ஆன்மா அவ்வைம் பொறிகளுக்கு வேறாய் உள்ளது; ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது - கனவின்கண் கண்டவற்றை நனவின்கண் உரைப்பதால் அக்கனவைக் கண்டறிந்து உரைக்கும் ஆன்மா வேறாய் உள்ளது; கண்படில் - கனவில்லாத துயிலின்கண்; உண்டிவினை - இன்பதுன்ப நுகர்ச்சியும் உடம்பின் இயக்கமும்; இன்மையின் ஆன்மா உள்ளது - இல்லாமையால் ஆன்மா உள்ளது; உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது - தானே உணராது மற்றொன்று உணர்த்த உணர்தலின் அவ்வுணர்த்தும் பொருளுக்கு வேறாய் ஆன்மா உள்ளது; மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது - மாயா காரியமாகிய உடம்பின்கண் ஆன்மா உள்ளது.

**கருத்து :** உயிரினது இருப்பும் இயக்கமும் கூறப்பட்டன.

# 3. உயிர் இருப்பு

முதற்சூத்திரத்தில் முதல்வனது உண்மையைக் கூறி, இரண்டாவது சூத்திரத்தில் வினையைப்பற்றிக் கூறி, மூன்றாவது சூத்திரத்தில் வினைப்பயனை அனுபவித்தற் குரிய ஆன்மா உண்டு என்று நிறுவுகிறார். உயிரை ஆன்மா என்பது, வைதிக சைவ சமய நூல் வழக்கு.

1) ஆன்மா என்ற பொருளைக் காணமுடியவில்லை, ஆதலில், அஃது இல்லை என்று கூறுவர், ஒரு சாரார். ஆனால், ஒரு பொருள் உளதானாலன்றி இலது என்னும் சொல்லுக்கு இடம் இல்லை. ஆகவே, இல்லை என்ற இடத்து, இவ்விடத்தில் இக்காலத்தில் இல்லை என்று பொருள்படுமேயன்றி, எவ்விடத்திலும் எக்காலத்திலும் இல்லை என்று பொருள்படாது. இல்லை என்ற சொல் வழக்கு உள் பொருளுக்கேயன்றி இல்பொருளுக்கு இல்லை. ஆகையால், "இலது என்றலின் ஆன்மா உளது" என்று கூறுகிறார். ஆன்மா உளது என்று கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. பின்வரும் ஏதுக்களுக்கும் இவ்வாறே கொள்க.

2) உடம்பே ஆன்மா என்பர், இன்னொரு சாரார். உடம்புக்கு வேறாய் ஆன்மா என ஒன்று வேண்டா என்பது அவரது கொள்கை. ஆனால், எனது உடல் என்றபோது உடைமையாகிய உடம்புக்கு வேறாய் எனது என்ற சொல்லுக்குப் பொருளாய் ஒன்று உள்ளது. எனது என்ற சொல்லுக்குப் பொருளாயுள்ள அதுவே ஆன்மா. ஆதலின், "எனதுடல் என்றலின் ஆன்மா உளது" என்று சொல்லு கிறார்.

3) மற்றொரு சாரார், ஐம்பொறிகளே ஆன்மா என்பர். உடம்பிலே புறப்பொருளைச் சென்று பற்றி மனத்துக்குக் கொடுக்கக்கூடிய கருவிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி

என்பன. ஆதலின், இவற்றுக்கு வேறாய் ஆன்மா என்ற ஒன்று இல்லை என்பர். ஆனால், இக்கூற்றும் பொருந்தாது. கண் முதலிய ஐம்பொறிகளும் உயிராய் இருக்குமாயின், இவையாவும் ஒரு தொழிலைச் செய்ய வேண்டும். ஆனால், அவை வேறு வேறு தொழிலைச் செய்கின்றன. கண், ஒளியைப் பார்க்கிறது; காது, ஒலியைக் கேட்கிறது; மூக்கு, மணத்தை நுகர்கிறது; நா, சுவையை அறிகிறது. மெய், ஊற்றினை உணர்கிறது. கண், ஒளியைப் பார்க்குமே தவிர ஓசையைக் கேளாது; காது, ஓசையைக் கேட்குமே தவிர மணத்தை நுகராது. இவ்வாறு ஒரு கருவி பற்றுகிற புலனை மற்றொரு கருவி பற்றாது. ஆதலின், இக்கருவிகள் யாவும் உயிராகா. இவற்றைப் பயன்படுத்திக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் பொருள் ஒன்று வேறாய் உள்ளது. அதுவே ஆன்மாவாகும். ஆகவே, "ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது" என்கிறார்.

4) கனவு நிலையில் செயல்படுவது, சூக்கும உடம்பு; ஆதலின், அச்சூக்கும உடம்பே ஆன்மா என்பர், பிறிதொரு சாரார். விழிப்பு நிலையிலிருந்து கனவு நிலைக்குச் செல்லும்போது கண் முதலிய கருவிகள் செயற்படுவ தில்லை. எனினும், கனவில் காட்சி, செயல் முதலியவை நிகழ்கின்றன. அந்நிகழ்ச்சிகளைக் கண்டறிந்து நனவின்கண் உரைப்பது ஒன்றுள்ளது. அதுவே ஆன்மா; ஆதலின், "ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது" என்கிறார். ஒடுக்கம் என்றது கனவு நிலையை. "ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின்" என்ற தொடரை, ஐம்புலன் அறிதலின் ஒடுக்கம் அறிதலின் என்று இரு தொடராக்கிப் பொருள் கொள்ளப்பட்டது.

5) இனி, பிராண வாயுவே ஆன்மா என்பர், வேறொரு சாரார். பிராணவாயு உடம்பில் இருந்தால் ஆன்மா இருப்பதாயும், அது இல்லை என்றால் ஆன்மா இல்லை என்றும் கருதப்படுவதே அதற்குக் காரணமாகும். விழிப்பு நிலையிலும் துயில் நிலையிலும் பிராணவாயுவின் இயக்க முள்ளது. பிராணவாயுவே ஆன்மாவாய் இருக்குமாயின்

விழிப்பு நிலையில் இருக்கின்ற இன்பதுன்ப உணர்ச்சிகள் துயில் நிலையிலும் இருக்க வேண்டும். அவ்வாறு இல்லை யாதலின் பிராண வாயு ஆன்மாவாகாது. மேலும், யோகப் பயிற்சியினால் பிராண வாயுவைக் கட்டுப்படுத்தியும் விட்டும் பழகுவது காணப்படுகிறது. ஆதலின், பிராண வாயுவுக்கு வேறாய் ஆன்மா ஒன்று உளதாம். எனவே, "கண்படில் உண்டிவினை இன்மையின் ஆன்மா உளது" என்று கூறுகிறார்.

6) பிரமப்பொருள் ஒன்றே எல்லா உடம்புகளிலும் உள்ளது. வானத்தில் உள்ள சூரியனது உருவம் நிலத்தின் கண்ணே நீர் நிரம்பிய பல குடங்களிலும் காணப்படும். அஃது ஒவ்வொன்றும் சூரியனேயாதல்போல, எங்கும் நிறைந்து ஞானமயமாய் விளங்கும் பிரமப்பொருள் ஒன்றே எல்லா உடம்பிலும் ஆன்மாவாய் இருக்கின்றது என்பர், ஒரு பகுதியினர். உடம்பில் உள்ள ஆன்மாவோ அறியாமை யுற்றுப் பிறர் அறிவிக்க அறியும் இயல்பினதாய் இருப்பது. பிரமமே எனில், முழுத்த ஞானமேயானது. ஆகவே, ஆன்மா பிரமப்பொருளுக்கு வேறாய்ச் சிற்றறிவுடையதாய் இருப்பதால், "உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது" என்று கூறுகிறார்.

7) இங்ஙனம் உண்டு என நிறுவப்பட்ட ஆன்மா உடம்பினுள் உள்ளது. அவ்வுடம்பின் இயல்பை, "மாயா இயந்திர தனு" என்கிறார். முதற்சூத்திரத்தின்கண் பாசத்தின் கூறுகளாகிய மலத்தைக் கூறி, இரண்டாவது சூத்திரத்தில் வினையைக் கூறி, மூன்றாவது சூத்திரத்தில் மாயையைக் கூறுகின்றார். மலம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் பாசம் எனப்படும்.

மாயை என்பது, உயிரில் பொருள்களாகிய நிலம், நீர், தீ முதலியன ஒடுங்குங்கால் ஒன்றனுள் ஒன்றாய் ஒடுங்கி அணுவாய்ச் சக்தியாய் மாறும். அச்சக்தி மாயை எனப்படும். மீளத் தோன்றுங்கால் மாயை அணுவாகி, அணு தன்மாத் திரையாகி, தன்மாத்திரை பூதமாகி, பூதம் இவ்வகண்ட

உலகமாய்க் காட்சி அளிக்கும் இப்பூதங்களும் பால் தயிராவது போலப் பரிணமித்து, அந்தக்கரணமும் கலைத் தொகுதியும் தன்னுட்கொண்ட உடம்பாய் விளங்கும்.

தன்மாத்திரையாவன நிலம் முதலிய ஐம்பூதங்கட்கும் காரணமான நுண் அணு.

பூதமாவன நிலம், நீர், தீ, காற்று, விண் என்பன.

அந்தக்கரணமாவன மனம், சித்தம், அகங்காரம், புத்தி என்பன.

கலையாவன கலை, வித்தை, அராகம், காலம், நியதி, புருடன், மாயை என்பன.

இங்ஙனம், உயிரின் வேறாகிய உடம்பும், உலகப் பொருளும் மாயையின் காரியப்பொருள் என்பதைக் காணலாம். மாயையால் ஆகிய ஐம்பூதப் பரிணாமம் உடம்பு ஆதலின், இதனை "மாயா இயந்திர தனு" என்கிறார்.

இவ்வுடம்பிலிருந்து ஆன்மா என்ன செய்கிறது? "எனது உடல் என்றலின்" உடம்பின் வேறாகிய ஆன்மா உடம்பைத் தனது எனத் தருக்கி, அவ்வுடம்பின் துணை கொண்டு வினை செய்கிறது. "ஐம்புலன் அறிதலின்" என்றலின், புறப்பொருளாகிய ஐம்பூதங்களின் உருவமாகிய உலகனைத்தையும் அறிவானும் அறியப்படும் பொருளுமாய் இருந்து அறிகிறது. "ஒடுக்கம் அறிதலின்" என்றலின், பொருளை அகத்தே நுண்மையாய் உணர்கிறது. "கண்படில் உண்டிவினை இன்மையின்" என்றலின், கருவியோடு கூடியிருந்தும் செயலற்று ஓய்வு பெறுகிறது. "உணர்த்த உணர்தலின்" என்றலின், தன்னால் அறியமாட்டாதவற்றைப் பிற உயிர்களும் பொருள்களும் உணர்த்த உணர்கிறது. "உளது இலது" என்றலின், உடம்புள் இருந்தும் இல்லாதது போலத் தோன்றுமாறு யோக முயற்சியால் சமாதி நிலை எய்துகிறது. உளதாகிய உயிர் இலது என்று சொல்லும்

அளவுக்கு ஒடுங்குந்தன்மை உடையதாய் இருப்பதால்தான் இன்றைய மருத்துவ விஞ்ஞானத்துறை பெரிய பெரிய அறுவைகளைச் செய்வதற்கு வாய்ப்பாயுள்ளது. "மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா" என்றலின், உயிர் உடம்பை இத்துணைச் செயல்களுக்கும் கருவியாய்ப் பயன்படுத்து கிறது என்ற இக்குறிப்புப்பொருளும் இச்சூத்திரத்தின்கண் அறிய நிற்பதை உணர்க.

## நான்காவது சூத்திரம்

*அந்தக் கரணம் அவற்றின்ஒன் றன்றுஅவை*
*சந்தித்தது ஆன்மா சகசமலத்து உணராது*
*அமைச்சரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே.*

***முடிபு :*** *ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்று அன்று; சகச மலத்தால் தானே உணராது; அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்து நின்று அஞ்சவத்தைத்தாம்.*

**பதப்பொருள் :** ஆன்மா - ஆன்மாவானது; அந்தக் கரணம் அவற்றின் ஒன்று அன்று - உட்கருவிகளாகிய மனம், சித்தம், அகங்காரம், புத்தி எனப்படும் நான்கனுள் ஒன்று அன்று; சகச மலத்து உணராது - உடன் நின்ற ஆணவமல மறைப்பால் அறியமாட்டாமையால்; அமைச்சு அரசு ஏய்ப்ப - மந்திரியோடு கூடிய மன்னவன் போல; அவை சந்தித்து நின்று - உட்கருவிகளோடு கூடி உடற்கண் நின்று; அஞ்சு அவத்தைத்து - நனவு, கனவு, துயில், உறக்கம், பேருறக்கம் ஆகிய ஐந்து நிலைகளில் மேற் சொன்ன கருவி கரணங்களோடு கூடுவதும் பிரிவதுமாய் இருக்கிறது.

**கருத்து :** அறிவன அறிந்து ஆவன செய்யும் ஆன்மா ஐவகை அவத்தை எய்தும் இயல்பு கூறப்பட்டது.

# 4. உயிரின் இயல்பு

முதல் மூன்று சூத்திரங்களில் பதி, பாசம், பசு ஆகிய முப்பொருள் உண்டு என்று கூறி, இச்சூத்திரத்தில் பசுவின் இயல்புபற்றிக் கூறுகிறார்.

முற்சூத்திரத்தில் ஆன்மாவானது உடல், புறக்கருவி, பிராணவாயு முதலியவற்றுக்கு வேறாய் உள்ளது என்று கூறினார். இங்கு உட்கருவிக்கும் வேறாய் உள்ளது என்று கூறினார். உட்கருவியாவன மனம், சித்தம், அகங்காரம், புத்தி என்பன. அவை உலகின் கூறாகிய பூதங்களுக்கும் தன் மாத்திரைகளுக்கும், உடலின் கூறுகளாகிய அறிகருவி செயற் கருவியாகிய பத்துக்கும் வேறாய், அருவமாய், உடலின் உள்ளீடாய் இருப்பவையாம். மேலும், அவை முறையே ஒன்றனுள் ஒன்றாய், ஒன்றின் ஒன்று சிறந்திருக்கின்றன. புறத்தே கண் முதலிய புறக்கருவிகள் அறிந்து வந்த பொருளை, அகத்தே மனம் முதலிய உட்கருவிகள் சீர்தூக்கி ஆன்மாவுக்கு அளிக்கவல்லன. மனம் பொருளைப் பற்றும்; சித்தம் சிந்திக்கும்; அகங்காரம் சிந்தித்த பொருளை ஏற்று இது என் சிந்தனை, இது என் கருத்து எனத் தனக்கு உரியதாக்கிக்கொள்ளும்; புத்தி நிச்சயிக்கும். இவ்வாறு இவை நான்கும் உயிருக்குத் துணைபுரியும் கருவிகளேயன்றி அவை ஆன்மா ஆகா. ஆதலால், "ஆன்மா அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று" என்று கூறுகிறார்.

ஆன்மா அறிவே வடிவமாய் இருந்தபோதிலும் பொருளை உள்ளவாறு அறிய முடிவது இல்லை. அதற்குக் காரணம் அதனோடு பிரிப்பின்றி உடனிருக்கும் மலத்தின் மறைப்பேயாகும். இம்மலம் எப்பொழுது கூடியது என்பதற்கு இடமின்றி, பிரிவின்றி உடன் இருப்பதால் இதனைச் 'சகச மலம்' என்று குறிக்கிறார். அதனால்

மறைப்புண்டிருப்பதுபற்றி, "சகச மலத்தால் உணராது" என்று ஆசிரியர் கூறுகிறார். ஆதலின், மனம் முதலிய உட்கருவிகளோடு கூடியே ஆன்மா அறிகிறது. அதுபற்றியே "அவை சந்தித்து நின்று" என்கிறார். அரசன் அமைச்சரோடு கூடி அரசியல் காரியங்களைப் பார்ப்பது போல, மனம் முதலிய உட்கருவிகளோடு கூடி ஆன்மா உலகியல் பொருள்களை அறிகிறது. அரசன் அறிவுடையனாயினும் அமைச்சரின் அறிவுத்துணையின்றி ஆட்சி நடத்தமுடியாது. அதுபோல, ஆன்மாவும் அறிவுடையதாயினும் மனம் முதலிய கருவிகளின் துணையின்றிப் பொருள்களை அறிய முடியாது. ஆதலின், "அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்து நின்று அறியும்" என்று கூறுகிறார்.

உட்கருவிகளோடு கூடி நிற்கும் ஆன்மா ஐந்து அவத்தைகளை எய்துகிறது என்கிறார், ஆசிரியர். ஐந்து அவத்தைகளாவன நனவு, கனவு, துயில், உறக்கம், பேருறக்கம் என்னும் ஐந்து நிலைகளாகும். நனவு நிலையில் கண் முதலிய புறக்கருவிகள், மனம் முதலிய அகக் கருவிகள், பிராணவாயு முதலிய வாயுக்கள் ஆகியவற்றோடு கூடி ஆன்மா புருவ நடுவில் இருக்கும். அடுத்து, கனவு நிலையில் கண் முதலிய புறக்கருவிகளினின்றும் நீங்கி மனம் முதலிய உட்கருவிகளோடும் பிராணவாயு முதலிய வாயுக்களோடும் கூடிக் கண்டத்தில் நிற்கும். பின்னர்த் துயில் நிலையில் நெஞ்சத்துக்குச் செல்லும்போது சித்தமாகிய உட்கருவியோடும், பிராண வாயுவோடும் கூடி நிற்கும். அடுத்து, உறக்க நிலையில் பிராணவாயு ஒன்றோடு உந்தித்தானத்தில் நிற்கும். இறுதியாய்ப் பேருறக்க நிலையில் பிராண வாயுவின் இயக்கமுமின்றி ஆன்மா தனித்து மூலாதாரத்தில் நிற்கும். இவ்வாறு ஆன்மா உடலின்கண் ஐந்து அவத்தைகளை எய்துவது இயல்பாய் இருப்பதால் "ஆன்மா அஞ்சவத்தைத்து" என்கிறார்.

இவ்வாறு கருவிகளை விட்டுக்கொண்டே கீழ்நோக்கி மூலாதாரத்தை அடைகிற ஆன்மா, மீண்டும் மேல்நோக்கி

வருகிறபோது ஒவ்வொரு நிலையிலும் விட்ட கருவிக ளோடு கூடி, நனவு நிலையில் புருவ நடுவுக்கு வரும். ஆன்மா கீழே நோக்கிச் செல்லும்போது கீழாலவத்தை என்றும், மேல்நோக்கி வரும்போது மேலாலவத்தை என்றும் கூறப்படும். ஆன்மா மூலாதாரத்துக்குச் சென்றுதான் திரும்பும் என்பது இல்லை. இடையிடையே மடங்கி மீள்வதும் உண்டு. இவ்வவத்தை அவ்வப்போது ஒவ்வொரு வர் அனுபவத்திலும் காணப்படுவது.

"அமைச்சு அரசு" என்று கூறியதனால், அரசன் அமைச்சரோடு கூடி நின்று அரச காரியங்களை ஆராய்வதும், பிறகு தான் அந்தப்புரத்தில் தனித்து ஒடுங்குவதும் போல, ஆன்மா நனவின்கண் எல்லாக் கருவிகளோடும் கூடித் தன் அறிவு, இச்சை, செயல் ஆகியவற்றை ஆளுவதும், பிறகு அதீதத்தில் தனித்து நிற்பதும் செய்வதால் அவத்தைகளைக் குறிப்பிடுவது இன்றியமையாததாயிற்று.

## ஐந்தாவது சூத்திரம்

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு**
**அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்**
**தாந்தம் உணர்வின் தமிஅருள்**
**காந்தம் கண்ட பசாசத் தவையே.**

**முடிபு :** மெய், வாய், கண், மூக்கு, செவி அளந்தறிந்தும், விளம்பிய உள்ளத்தை அறியா; ஆங்கு அவை போலத் தம் தமி அருள் தாம் உணர்வின் அறியா; அவை காந்தம் கண்ட பசாசம் போல.

**பதப்பொருள் :** மெய் வாய் கண் மூக்கு (செவி) - மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகள்; அளந்து அறிந்து - தத்தம் அளவில் புலன்களால் உலகப் பொருள்களைக் கண்டறிந்தும்; விளம்பிய உள்ளத்து - முற் சூத்திரங்களால் சொல்லப்பட்ட உயிரை; அறியா - அறிய மாட்டா; ஆங்கு அவை போல - அத்திறத்தில் அவ்வைம் பொறிகளைப் போல; தம் தமி அருள் - தம்மை இயக்கு கின்ற முதல்வனது அருளை; தாம் உணர்வின் அளந்து அறிந்து அறியா - உயிர் (தம் அளவுக்குட்பட்ட உலகப் பொருளை அறிந்தும்) தம் உணர்வினாலே முதல்வனை அறியமாட்டா; அவை காந்தம் கண்ட, பசாசத்து - உயிரின் முன் கண் முதலிய கருவிகளும், முதல்வன் திருவருளின் முன் உயிர் உணர்வும் தொழிற்படுவது, காந்தத்தின் முன் இரும்புத்தூள் போலவாம்.

**கருத்து :** ஆன்மா திருவருள் இயக்க இயங்கும் என்பது கூறப்பட்டது.

# 5. உயிருக்கு இறைவன் செய்யும் உபகாரம்

முற்சூத்திரங்களில் உயிரானது உடம்புக்கும் கருவிகட்கும் வேறாய் உள்ளது என்றும், அது மலமறைப்பால் சிற்றறிவுடையதாயிற்று என்றும் கூறினார். இங்கு அது முதல்வனால் அறிகிறது என்று கூறுகிறார்.

மூன்றாவது நான்காவது சூத்திரங்களில் கூறப்பட்ட உயிரைப்பற்றியே இங்கும் கூறுகிறார். அதனால் "விளம்பிய உள்ளத்து" என்று சொல்லுகிறார். உள்ளம் என்பது உயிரை.

**"ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின்"**

என்று திருவள்ளுவ நாயனாரும்,

**"ஈசனை என்நெஞ்சில் கண்டதுஎன் உள்ளமே"**

என்று திருநாவுக்கரசு நாயனாரும் கூறுவதனால், உள்ளம் என்பது உயிர் என்று அறியப்படும். முற்சூத்திரங்களில் ஆன்மா எனப்பட்ட உயிர், தத்துவங்களுக்கு உள்ளே இருப்பது என்பதை உணர்த்துவதற்கு 'உள்ளம்' என்றார் எனினும் அமையும். உயிரால், உலகப்பொருள்களை மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய கருவிகள் அறிகின்றன. மேலும் அவை அறியும்போதும் தத்தம் அளவுக்குட்பட்டே அறியும். கண் நீண்ட தொலைவில் உள்ள பொருளைக் காணாது. அவ்வாறே ஏனைய கருவிகளும் ஆம். இனி, இவை ஓர் அளவுக்குட்பட்டே பொருள்களை அறியுமே தவிர, நம்மை இயக்குகின்ற உயிரினை அறியா. ஆதலின், "மெய், வாய், கண், மூக்கு அளந்தறிந்து அறியா" என்று கூறுகிறார்.

"பொறிபுலன் கரணமெல்லாம் புருடனால் அறிந்து ஆன்மாவை அறிதரா"

என்ற சிவஞான சித்தியார் வாக்கையும் காண்க.

'தாம்' என்பதும், 'தம்' என்பதும் உயிரினைக் குறிக்கும். உயிர் பலவாதலின் பன்மையில் கூறுகின்றார். முதல்வன் உயிர்க்குயிராய் இருந்து இயக்குகிறான். ஆதலால், அவனது திருவருளை, "தம் தமிஅருள்" என்று கூறுகிறார். 'தமி' என்றது தம்மையெல்லாம் உடைய முதல்வனைக் குறிக்கும் ஓர் அருமையான சொல். இவ்வழக்கை ஏனைய நூல்களில் காண்பது அரிது. முதல்வனது அருளால் உயிர்களானவை உலகப்பொருள் களை அறிந்தும் முதல்வனை அறியா; இனி, உலகப் பொருள்களை அறிவதும் அளவுக்குட்பட்டே அறியும். ஆதலின், "தாம் உணர்வின் அளந்து அறியா" என்று கூறு கின்றார். "அளந்தறிந்தறியா" என்ற உவமைக்குரிய வினையை உவமேயத்துக்கும் ஏற்றிப் பொருள் கொள்ளப்பட்டது.

இனி, தம்மை இயக்கும் உயிரைக் காணாத கண் முதலிய கருவிகள் எவ்வாறு தொழிற்படுகின்றன? அருளை அறியாத உயிரும் எவ்வாறு தொழிற்படுகின்றது? இரும்புத் தூள் காந்தக்கல்லின் முன் எவ்வாறு செயல்படுகிறதோ அது போன்று, உயிரின் முன் கண் முதலிய கருவிகளும், அருளின் முன் உயிரும் செயற்படுகின்றன என்பதாம். ஆதலின், "காந்தம் கண்டபசாசத் தவையே" என்று கூறுகிறார். காந்தம் என்பது, ஈர்க்கும் சக்தியுடைய ஒருவகைக் கல். பசாசம் என்பது இரும்புத்தூள். இனி, இரும்பு அசைந்து தொழிற்படினும், காந்தத்துக்கு அசைவு இல்லை; அதுபோன்று, உயிர் இயங்கினும், முதல்வனுக்கு அசைவு இல்லை என்பது உவமையால் விளங்குகிறது.

## ஆறாவது சூத்திரம்

*உணர்உரு அசத்துஎனின் உணராது இன்மையின்*
*இருதிற னல்லது சிவசத் தாம்என*
*இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.*

**முடிபு :** தமியாகிய பரம்பொருள் உணர் உருவோ எனின் அசத்து; உணராததோ எனின் இன்மை; இருதிறன் அல்லது சிவசத்தாம் என இரண்டு வகையில் மன்னுலகு இசைக்கும்.

**பதப்பொருள் :** உணர் உரு எனின் - முற்சூத்திரத்தில் கூறப்பட்ட முதல்வன் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய கருவிகளால் அறியப்படும் பொருள் என்றால்; அசத்து - அழியக்கூடிய பொருளாம்; உணராது எனின் இன்மை - எவ்வகையாலும் அறியப்படாத பொருள் என்றால் இல்பொருளாம்; இருதிறன் அல்லது - மேற்குறித்த இவ் விருவகையும் ஆகாமல்; சிவசத்தாம் என - சிவசத்து என்று; இரண்டு வகையில் - ஒரு வகையால் அறியப் படாததும், ஒரு வகையால் அறியப்படுவதும் ஆகிய பொருள் என்று இருவகையாக; மன் உலகு இசைக்கு - பெருமக்கள் கூறுவர்.

**கருத்து :** முதல்வனது அருள் ஞானம் துணையாக அவனை அறியலாம் என்பது கூறப்பட்டது.

## 6. இறைவன் இயல்பு

முற்சூத்திரத்தில் ஆன்மாவினது இயல்பைக் கூறி இங்கு முதல்வனது இயல்பு கூறுகிறார். தமியாகிய முதல்வன் உலகப்பொருள்களைப் போலக் கருவிகரணங் களால் உணரப்படும் பொருளா உணரப்படாதவனா என்பது கேள்வி.

கண்ணால் உலகப்பொருளைப் பார்க்கிறோம். அவை ஒரு காலத்தில் தோன்றி, ஒரு காலத்தில் மறைவதையும் காண்கிறோம். 'கண்டன மறையும்' என்கிறார், பட்டினத்தார். ஆகவே, கருவி கரணங்களால் அறியப்படும் பொருள் அழியும் என்பது தெரிகிறது. இனி, காதினால் இசையைக் கேட்கிறோம்; நாவினால் சுவையை உணர்கிறோம்; மூக்கினால் மணத்தை நுகர்கிறோம்; பரிசத்தினால் ஊற்றினை உணர்கிறோம். இவை எல்லாம் நுண்பொருளாயினும் அவையும் அழியக்கூடியனவேயாம். மனத்தினால் உணரப்படுவனவும் அவ்வாறேயாம். ஆகவே, கருவிகளால் பற்றி உணரப்பட்ட பருப்பொருளும் நுண் பொருளும் அழியக்கூடியனவேயாம். அதுபோல, முதல்வன் பருப்பொருளாகவோ நுண்பொருளாகவோ அறியப்படும் பொருளானால் அவனும் அழியக்கூடிய அசத்தாம். ஆதலால், "உணர் உரு எனின் அசத்து" என்கிறார்.

"அறிபொருள் அசித்து அசத்தாம்"

என்று, அறியப்படும் பொருளெல்லாம் அறிவற்றதும் அழியக்கூடியதும் ஆம் என்று சொல்லுகிறார், வழி நூலாசிரியரான அருள் நந்திசிவம். முதல்வன் அழிவில் லாதவனாதலின், மனம் முதலிய கருவிகளால் அறியப் படாதவன் என்பதாயிற்று.

இனி, ஒரு பொருளைக் கண்ணாலும் காணமுடியாது, கருத்தாலும் நினைக்க முடியாது; இவ்வாறு எவ்வகை யாலும் அறியப்படாத பொருள் என்றால், அஃது இல்லாத பொருளாகும். அதுபோல, முதல்வன் எவ்வகையாலும் உணரப்படாதவன் என்றால், அவன் எவ்விடத்தும் எப் பொழுதும் அறியப்படாத பொய்ப்பொருள் என்றாகிவிடும். ஆதலால்,

**"உணராது (எனின்) இன்மை"**

என்கிறார்.

**"அறியாதது இன்றாம்"**

என்கிறார், சித்தியாரில். 'எனின்' என்பதை 'உணருரு எனின்', 'உணராது எனின்' என முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது.

ஆனால், முதல்வன் உணரப்பட்ட உலகப்பொருள் போன்ற அசத்தும் அல்லன்; உணரப்படாத ஆகாயத்தாமரை போன்ற இல்பொருளும் அல்லன். அவன் இவ்விரு திறனும் அல்லாத, 'சிவசத்து' என்று கூறுகிறார், ஆசிரியர். மனம் முதலிய கருவிகளினால் அறியப்படாமையால் 'சிவம்' என்றும், உண்மை ஞானிகளால் உணரப்படுதலால் 'சத்து' என்றும் கூறப்பட்டது.

நூல் அறிவு, இயற்கை அறிவு என மக்கள் அறிவு இருவகைப்படும். நூலைக் கற்பதனால் பெறும் அறிவு நூலறிவு எனப்படும். நூலறிவு இல்லாதவர் சிறந்த திறமை யுடையவராய்த் திகழ்வதைக் காண்கிறோம். இவ்வறிவு அனுபவ வாயிலாய்ப் பெற்ற அறிவாம். இது இயற்கை அறிவு எனப்படும்.

"மதிநுட்பம் நூலோ டுடையார்க்கு" என்று இவ்விரு வகை அறிவையும் குறிப்பிடுகிறார், திருவள்ளுவ நாயனார். இவற்றை முறையே பசுஞானம் என்றும், பாசஞானம் என்றும் கூறுவர். இவ்விருவகை அறிவினாலும் முதல்வனை

அறியமுடியாது. இவை மனம், பொறி முதலியவற்றால் பெறுகின்ற அறிவு ஆதலின் அழியுந்தன்மையன; அளவு பட்டன. மனத்துக்கும் பொறிகளுக்கும் அப்பாற்பட்ட பொருளை மனத்தாலும் பொறிகளாலும் அறியமுடியாது. ஆதலின், வழிநூலாசிரியரும்,

**"பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்**
**பார்ப்பரிய பரம்பரன்"**

என்று கூறுகிறார். ஆனால், அறிவினால் ஒரு நெறிய சித்தத்தோடு சிந்திக்கச் சிந்திக்க முதல்வனது திருவருளால் ஓர் அறிவு தோன்றும். அவ்வறிவின் துணைகொண்டு அறியவேண்டும். இவ்வறிவைப் பதிஞானம் என்பர். இதனை,

**"அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்**
**இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்**
**இவன்இறைவன்**
**என்றெழுதிக் காட்டொ ணாதே"**

என்ற சமய குரவராகிய திருநாவுக்கரசர் தேவாரத்தாலும் அறியலாம். இனி, பாச ஞானமும் பசு ஞானமும் அழியக் கூடியவையாதலின் அவை அபரஞானம் என்றும், பதி ஞானம் அழியாதது ஆதலின் அது பரஞானம் என்றும் கூறப்படும். முதல்வன் அபர ஞானத்தினாலே அறியப்படா தவன் என்றும், பர ஞானத்தினாலே அறியப்படுபவன் என்றும் இரு வகையினால் ஞானிகள் கூறுகின்றனர். ஆதலால், "இரண்டு வகையில் இசைக்கும்மன் னுலகே" என்கிறார், ஆசிரியர்.

## ஏழாவது சூத்திரம்

*யாவையும் சூனியம் சத்துஎதிர் ஆகலின்*
*சத்தே அறியாது அசத்துஇலது அறியாது*
*இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.*

*முடிபு : சத்தெதிர் யாவையும் சூனியம் ஆகலின் சத்து அறியாது; அசத்து இலது ஆகலின் அறியாது; இரண்டலா ஆன்மா இருதிறன் அறிவுளது.*

*பதப்பொருள் : சத்து எதிர் யாவையும் சூனியம் - சிவமாகிய சத்தின் முன்னர் உலகப்பொருள் யாவையும் தனித்துத் தோன்றா; ஆகலின் சத்து அறியாது - ஆதலால் சிவமாகிய சத்து அவற்றைப் பிரித்து அறியாது; அசத்து இலது (ஆகலின்) அறியாது - உலகப்பொருளாகிய அசத்து அறிவில்லாதாகையால் சிவமாகிய சத்தினை அறிய மாட்டாது; இரண்டு அலா ஆன்மா - மேற்கூறிய சத்தும் அசத்தும் அல்லாத உயிரே; இருதிறன் அறிவுளது - சிவமாகிய சத்தினையும் உலகப்பொருளாகிய அசத்தினையும் அதுவதுவாய்க் கலந்து அறியவல்லதாம்.*

*கருத்து : சிவமாகிய சத்தை அறிந்து அனுபவித்தற்குரிய தகுதி உயிருக்கே உண்டு என்பது கூறப்பட்டது.*

# 7. இறைவனை உயிர் அறியும்

மூற்சூத்திரத்தில் கூறப்பட்ட சிவசத்து, வாக்கு மனம் ஆகியவற்றினாலே அறியப்படும் அழிபொருளும் அன்று; அறியப்படாத இன்மைப்பொருளும் அன்று; ஆனால், பரஞானத்தால் அறியப்படும் பொருளாகும் என்று அதன் உண்மை கூறினார். இங்கு அச்சிவத்தை அறியக்கூடிய தகுதி உயிருக்கே உண்டு என்று கூறுகிறார்.

சிவமாகிய சத்து எல்லாப் பொருளிலும் உள்ளும் புறம்பும் நீக்கமற நிறைந்து விளங்கும் ஞான ஒளியாகும். அதன்கண் அகப்படாத பொருள் ஒன்றும் இல்லை. அதனால் "சத்தெதிர் யாவையும் சூனியம்" என்கிறார் ஆசிரியர். இவ்வாறெல்லாம் ஒருங்கே சிவ ஒளிப் பரப்பினுள் அகப்படுதலின், அதனின் வேறாய் நின்று அறிதலாகிய செயல் நிகழ்தற்கு வாய்ப்பு இல்லை. அதனால், "சத்து அறியாது" என்கிறார். அறிவானும் அறியப்படும் பொருளும் எனப் பிரிந்து நின்றாலன்றி அறிதலாகிய செயல் இல்லை. 'அறியாது' என்பதற்கு அறிதல் என்ற செயலைச் செய்யாது என்பது பொருள்; 'ஏரின் உழாஅர்' என்ற திருக்குறளில் உழாஅர் என்ற சொல்லுக்கு "உழுதலைச் செய்யார்" என்று பரிமேலழகர் பொருள் கூறுவது இங்கு நினைவுகூரத்தக்கது. அருள்நந்தி சிவனார், இரவியின்முன் இருள்போல, சத்தாகிய சிவத்தின் முன் அசத்து நில்லாது; ஆகையால், சத்தாகிய சிவம் அசத்தை அறியாது என்கிறார். இனி, "யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின் சத்தே அறியாது" என்பதற்கு உமாபதி சிவாசாரியார், "அசத்தைச் சத்து அறிந்து அகலவேண்டா" என்று கருத்துரைக்கின்றார்.

எனவே, அறிவதாகிய தொழிலின் நிகழ்ச்சி ஒன்றை அறிந்து, கொள்ளுதற்கோ தள்ளுதற்கோ நிகழ்வது. சத்தாகிய சிவத்துக்கு அசத்தை அறிந்து தள்ள வேண்டிய நிலைமை இல்லை. ஏனெனில், அசத்தோடு அதற்குத் தொடர்பு இல்லாமையே காரணமாம். இதனை விளக்க வந்த மதுரைச் சிவப்பிரகாசர், "அசத்தாகிய பாசத்தைச் சத்தாகிய சிவன் அறிந்து அகலவேண்டா என்றது, இந்திர ஜாலம் காட்டுமவனை அது பிரமிப்பிக்க மாட்டாதாற்போலப் பாசங்கள் ஜடமானபடியாலே சிவனை மறைக்கமாட்டா. ஆகையால், அவனுக்கு இதை அறிந்து அகல வேண்டா என்றது என அறிக" என்று உரைக்கின்றார். இக் கருத்துப்படி இந்திர ஜாலம் அசத்தாகவும், அதனைக் காட்டுபவன் சத்தாகவும் நிற்பது காணலாம். இந்திர ஜாலம் காட்டுபவனும் இந்திர ஜாலமும் ஆகிய இரண்டும் முறையே படைப்போனும் படைக்கப்படும் பொருளும் ஆகிய தொடர்பை உடையன. படைக்கப்படும் பொருளில் ஒவ்வொரு கூறையும் படைப்பவன் அறிவான். ஆகையால், அப்பொருளின்கண் அறியாமை மயக்கம் தோன்றிப் படைத்த பொருளை ஒவ்வொன்றாய் அறியவேண்டிய அவசியம் இல்லை. அதுபோல அசத்துப்பொருள் சத்தாகிய சிவத்தால் படைக்கப்படுவதால் அவ்வசத்தை அறிய வேண்டிய இன்றியமையாமை சிவத்துக்கு இல்லை என்பதாம்.

உலகப்பொருள்களாகிய அசத்து அறிவில்லாதவை. அவற்றைச் சடம் என்பர். அவை அறிவில்லாதவை. ஆதலால், அவற்றுக்கு அறிதல் என்ற தொழில் இல்லை. ஆதலின், "அசத்து இலது (ஆகலின்) அறியாது" என்கிறார். உமாபதி சிவனாரும், "சத்து இது அசத்துத் தான் அறியாது" என்கிறார்.

இனி, சிவமாகிய சத்துப்பொருள், உலகமாகிய அசத்துப்பொருள் ஆகிய இரண்டினும் வேறுபட்டது உயிர். அதனை, "இரண்டலா ஆன்மா" என்கிறார். இத்தொடர்

"இரண்டுமிலித் தனியனேற்கே" என்ற திருவாசகத் தொடரை அடியொற்றி அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

அறிவுடையதாய்ச் சிவத்தோடு கலந்து சத்தையும், உலகப்பொருளோடு கலந்து அசத்தையும் அறியும் தகுதி உயிருக்கு உண்டு. அது விளங்குவதற்காகவே, "இருதிறன் அறிவுளது" என்கிறார். இவ்வாறு சத்தோடு கூடிச் சத்தையும், அசத்தோடு கூடி அசத்தையும் அதுவதுவாய்க் கலந்து நின்று அறிவதனால் உயிரைச் 'சதசத்து' என்று பெரியோர் கூறுவர். இக்கருத்து இனிதே புலப்பட

**"சத்துஅசத்து அறிவது ஆன்மா**
**தான்சத்தும் அசத்தும் அன்று**
**நித்தமாய்ச் சதசத் தாகி**
**நின்றிடும் இரண்டன் பாலும்"**

என்கிறார், அருள்நந்திசிவனாரும். எனவே, உயிரால் அறியப்படுவன சத்தும் அசத்தும் என இரண்டும் ஆயின.

இனிச் சத்தையும் அசத்தையும் அறிவது உயிர் என்றபோது, அது எப்படி அறிகிறது? சத்தை அறிகிறபோது அவ்வறிவினால் சத்தின் இடமாய் நின்று அதன் இயல்புகளை அறிகிறது. இவ்வாறே அசத்தை அறிகிறபோது அவ்வறிவினால் அசத்தின் இடமாய் நின்று அதன் இயல்புகளை அறிகிறது.

இனிச் சிவமாகிய சத்துக்குப் பொருளாகாத உலகமாகிய அசத்து, சத்தாகிய உயிரின் முன்னர் எவ்வாறு அறியப்படும் பொருளாகிறது? சத்தும் சித்துமாகிய சிவமும் உயிரும் ஓரினமாயினும், சிவத்தை நோக்க, உயிர் மலப் பிணிப்பால் அறியாமையும் குற்றங்கள் விரவும் தன்மையும் உடையது. ஆகையால், அறிவில்லாததாகிய அசத்தோடு கலந்து அறிகிறபொழுது அவ்வசத்து அதன்முன் அறியப் படும் பொருளாகிறது என அறிக. அசத்தாம் தன்மை உயிரினிடம் இருப்பதனாலே, "குற்றமெல்லாம் உற்றிடும் உயிரின் கண்ணே" என்று அருள் நந்திசிவனார் கூறுகிறார்.

இறைவன், உயிர், தளை ஆகிய முப்பொருளுள் ஏனைய இரண்டையும் அறிபொருள் உயிர் என்பதை அநுபூதிச்செல்வர் உமாபதிசிவனார்,

***"சத்தசத்தைச் சாராது அசத்தறியாது அங்கண்இவை
உய்த்தல் சதசத்தாம் உயிர்"***

என்று கூறுவதால் உணரலாம்.

## எட்டாவது சூத்திரம்

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்துஎனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு**
**அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.**

**முடிபு :** இரண்டலா ஆன்மாவாகிய உயிர் செய்யும் தவத்தால் தம் முதல் குருவுமாய் ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த, விட்டு அன்னியம் இன்மையின் அரன்கழல் செலும்.

**பதப்பொருள் :** தவத்தினில் - ஆன்மாக்கள் செய்யும் தவத்தால்; தம்முதல் - இறைவன்; குருவுமாய் - உள்ளுணர்வாய் உணர்த்துவதேயன்றிக் குருவாகவும் வந்து; ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என - ஐம்புலன்களாகிய வேடர் கூட்டத்தில் வளர்ந்து உன் இயல்பினை மறந்தாய் என்று, உணர்த்த - அறிவுறுத்தவே, அவ்வறிவால்; விட்டு - ஐம்புலத் தொடர்பைவிட்டு நீங்கி; அன்னியம் இன்மையின் - (அறிவுக்கறிவாய் இருக்கும் அரன்கழலன்றி) வேறு சார்பு இல்லாமையால்; அரன் கழல் செலும் - முதல்வனது திருவடியை அணையும்.

**கருத்து :** முதல்வனே குருவாய் எழுந்தருளி வந்து உண்மை உணர்த்துவான் என்பது கூறப்பட்டது.

# 8. இறைவன் குருவடிவில் வந்து உணர்த்தல்

உயிர் அறிவுள்ள பொருளாதலின் சிவத்தை அறிவதற்குரிய தகுதி உண்டு என்று முற்சூத்திரத்தில் கூறினார். இங்கு அத்தகுதிபற்றி உயிருக்கு முதல்வனே குருவாய் வந்து உணர்த்துவான் என்று கூறுகிறார்.

இறைவனை அறிவதற்கு உயிருக்கு மெய்யுணர் வோடு தவமும் வேண்டும். தவம் என்பது, உயர்ந்த குறிக்கோளை அடைவதற்குச் செய்யும் முயற்சி. அவ்வகை யில் இறைவன் அருளைப் பெறுதற்குச் செய்யும் பெரு முயற்சியுங்கூடத் தவமெனப்படும். தவம் மேற்கொள்வோன் தனக்குற்ற துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு பிறர்க்கும் துன்பம் செய்யாது வாழ்வான்.

**"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை**
**அற்றே தவத்துக் குரு"**

என்பது பொய்யாமொழி. சாதாரணமாய் உலகியலிலுங்கூட ஓட்டப்பந்தயம் ஓடுபவர், இடையிலே முள் குத்துவது போன்ற சிறு துன்பங்கள் நேர்ந்தாலும் பொருட்படுத்துவது இல்லை; தம்மோடு ஓடுபவர், மேலே வந்து மோதினாலும் கவலைப்படுவது இல்லை; குறிக்கோளை அடையவே அவர் விரைவார்.

**"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்**
**எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - செவ்வி**
**அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்**
**கருமமே கண்ணாயி னார்"**

என்ற குமரகுருபர சுவாமிகள் திருவாக்கும் இத்தவத்தைக் குறித்ததேயாகும். இது தவத்தின் பொது இயல்பு. இனி, சரியை, கிரியை, யோகம் எனச் சாத்திரங்கள் ஓதும் செயல் முறைகளும் தவம் எனப்படும். சரியையாவது, நல்லொழுக்கம். கிரியையாவது, அறம் பிறழாத செய்கை. யோகமாவது, மனத்தின் திட்பம். சரியையால் மந்ததர சத்திநிபாதமும், கிரியையால் மந்த சத்திநிபாதமும், யோகத்தால் தீவிர சத்திநிபாதமும் உண்டாகும். சத்திநிபாத மாவது, நலந்தீங்கு கண்டு, நலத்தினை அறிந்து உணர்தல். மந்ததர சத்திநிபாதமாவது, நல்லதன் நன்மையைத் தெரிந்து விரும்புதல். மந்தசத்திநிபாதமாவது, நன்மையின்பால் பற்று வைத்தல். தீவிர சத்திநிபாதமாவது, அது நல்கும் இன்பம் நுகர்ந்து அதனிடத்தே உறைத்து நிற்றல். சத்திநிபாதம் என்ற தொடர் சத்தி + நிபாதம் எனப் பிரியும். சத்தியாவது, உண்மை உணர்வு. நிபாதமாவது, பதிதல். உண்மை உணர்வாகிய அருள்ஞானம் பரசிவத்திலிருந்து கீழுள்ள உயிரிடத்தே வந்து பதிதலால் அதைத் தோன்றுதல் என்று சொல்லாமல் நிபாதம் என்று சொல்லுகின்றனர்.

இனி, தவம் செய்யும் உயிர்கள் மூன்று வகையாய் உணர்த்தப்பெறும். முதலாவதாய், இயற்கைக்காட்சியி லிருந்து உண்மை புலப்படுத்தப்படும். நீர், மலை உச்சியி னின்றும் இழிந்து கால்வாய் வழியே தாழ்ந்து சென்று ஆங்காங்குப் பயன்படுகிறது. நீர், உயர்ச்சியை விரும்ப வில்லை; தாழ்ச்சியை விரும்புகிறது. சென்றவிடமெல்லாம் அது நன்மையைப் பெறுவதில்லை; பிறர்க்குப் பயன்படு கிறது. அதுபோன்று உயிரானது உயர்ந்த இடத்தை விரும்பாது தாழ்ந்த இடத்திலே நின்று, தான் நலம் பெற விரும்பாது பிறர்க்குப் பயன்பட வேண்டும் என்ற உண்மை இயற்கைக்காட்சியினால் புலனாகிறது. இஃது இயற்கை வாயிலாய் இறைவன் காட்டுகிற அருள். அடுத்து, மக்கள் வடிவிலே வந்து உண்மைப்பொருளை விளக்கம் செய்வது. பெற்றோர் வாயிலாகவும், நண்பர்கள் வாயிலாகவும்,

ஆசிரியர் வாயிலாகவும் முதல்வன் உணர்த்துகிறான். மூன்றாவதாய் உள்ளத்திலே உயிருக்குயிராய் இருந்து "காட்டாதன எல்லாம் காட்டி" உண்மையை விளங்க வைப்பது. இது திருவருள். இவ்வாறு, நன்முயற்சியால் பக்குவப்பட்ட உயிரின் தகுதிக்கேற்ப உணர்த்துகிறான். ஆதலால், "தவத்தினில் உணர்த்த" என்கிறார். அண்மையில் இருந்து மறைந்த ஆங்கில நாட்டு அறிஞர் கருத்தும் இதனோடு ஓரளவு ஒத்து உள்ளது என்பதைக் கண்டு மகிழ்க.

"We have experience of three kinds of helps - animal (Instinctive) Grace, human Grace and spiritual Grace." (Aldous Huxley)

இவ்வாறு பக்குவப்பட்ட உயிருக்கு அருள்புரிந்து உணர்த்துபவன், கருணையே வடிவாயுள்ள முதல்வனாகிய சிவமேயாம். அவன் இயற்கைப்பொருள்களினின்றும், உள் நின்றும் உணர்த்துவதோடு குருவாயும் புறத்தே வந்து அருள்புரிவான் என்பதாம். மானுட வடிவிலே தோன்றி அருளுவது சிவத்தினது எளிமைப்பண்பாகும். அறிவு வடிவாகிய உயிர்க்கு, அறியவேண்டுவனவற்றை அறியும் தகுதி இருந்தும் முதல்வன் உணர்த்த வேண்டிய இன்றியமையாமை ஏன்? அறிவே வடிவாகிய உயிர், மல மறைப்பால் அறியாமையுறுகிறது. அறிவும் அறியாமையும் உள்ளமையால் பிறரால் உணர்த்தப்பெற வேண்டிய அவசியம் உண்டாகிறது. முதல்வனாகிய சிவமே தன்னை அடையும் நெறியையும், தன்னை அறியும் அறிவையும், தன்னையும் காட்டி அருள்புரிவான் என்ற உண்மையை,

> ***"நெறிநீர்மையர் நீள்வானவர் நினையும் நினைவாகி***
> ***அறிநீர்மையில் எய்தும்அவர்க் கறியும் அறிவருளிக்***
> ***குறிநீர்மையர்"***

என்ற திருஞானசம்பந்தர் திருவாக்கால் அறியலாம். இனி, திருஎறும்பியூர்த் திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசர்,

"தன்னையுந்தன் திறத்தறியாப் பொறியி லேனைத்
தன்திறமும் அறிவித்து நெறியுங் காட்டி"

என்பதனால், சிவமே நெறியையும் திறத்தையும் காட்டும் என்று கூறி விளக்குகிறார்.

"அறிவி லாத எனைப்புகுந் தாண்டுகொண்
டறிவதை அருளிமேல்
நெறியெ லாம்புல மாக்கிய எந்தையை"

என்று மாணிக்கவாசக அடிகள் இக்கருத்தையே வலியுறுத்து கின்றார். இத்தகைய சமய நுட்பங்களை ஆங்காங்கு வெளிப்படையாகவும் குறிப்பாகவும் அறிவுறுத்தருளிய மாண்பினால் திருஞானசம்பந்தர் முதலிய நால்வர் பெருமக்களையும் சமயகுரவர் எனச் சான்றோர் வழங்குவர் என்பது அறிக. இவ்வாறு தவத்தின் வாயிலாக மூவகை நிலையிலும் உணர்த்துபவன் முதல்வனாகிய சிவனே என்பது விளங்க, "தம் முதல் குருவுமாய்" என்று கூறுகிறார். இவ்வாறு ஞானமும், ஞான நெறியும் அருளி ஆன்மாவைத் தாங்குதல் முதல்வனுக்குக் கடன் என்று உணருமாறு, "தன்கடன் அடியேனையும் தாங்குதல்" என்று திருநாவுக்கரசர் கூறுகிறார்.

"அருவாகி நின்றானை யாரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று"

என்று சிவஞானபோத வெண்பாவும் கூறுகிறது. பக்குவப் பட்ட உயிர்க்கு முதல்வன் கட்டாயம் அருள்வான் என்று பின்வந்த ஜெர்மனி நாட்டு அருளாசிரியரான ஏக்கார்ட்டு என்பவர் கூறுகிறார்.

"God is bound to act, to pour Himself into thee as soon as He shall find thee ready" (Eckhart)

இனி, முதல்வன் என்ன உணர்த்துவான்? சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களாகிய வேடர்க ளிடையே அரசகுமாரனாகிய நீ அகப்பட்டுக்கொண்டு

உன்னை மறந்து அவர்கள் செலுத்துகிறபடி நடந்து கொண்டிருக்கிறாய். அந்நிலை மாறி உன் இயல்பான இடமாகிய அரசகத்துக்குச் சென்று இன்புறுவாயாக' என்று உணர்த்துவான். இதனை, "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென உணர்த்த" என்று கூறுகிறார். எறும்புக் கூட்டத்திடையே அகப்பட்ட நாங்கூழ்ப்பூச்சி எவ்வாறு அரித்துத் தின்னப்பட்டு அவதியுறுமோ அவ்வாறு, "ஐம்புலனால் அரிப்புண்டு அவதியுறுகிறேன்" என்று ஐம்புலனால் உண்டாகும் அயர்வினை உவமையால் விளக்குகிறார், மாணிக்கவாசக அடிகள்.

**"எறும்பிடை நாங்கூ ழெனப்புல**
**னாலரிப் புண்டலந்த**
**வெறுந்தமி யேனை விடுதி கண்டாய்"**

என்பது, திருவாசகம். 'அயர்ந்தனை வளர்ந்தென' என்றது 'வளர்ந்து அயர்ந்தனை' என்று மாற்றிப் பொருள் கொள்ளப் பட்டது. வேடர்களிடையே வளர்ந்தமையால் அயர்வு உண்டாயிற்று என்பதாம். ஆகவே, வேட்டுவர் வழிநின்ற அரசகுமாரன், அரசகம் அடைந்த வழி அவ்வேடர் கூட்டம் அவன்வழி நிற்பதுபோல, ஐம்புலன்களின் வழிநின்ற உயிர் உண்மை உணர்ந்தவிடத்து அப்புலன்கள் உயிரின் வழி அடங்கி நிற்கும் என்பது உணர்தற்பாலது.

உயிர், இருள் நீங்கி இன்ப விளக்கம் பெறும் பொருட்டு, உடல், கருவி, உலகு ஆகியவற்றை முதல்வன் படைத்து அளித்துள்ளான்; அங்ஙனமிருக்க, உயிர் வளர்ந்து அயர்ந்தது ஏன்? உயிருக்கு இன்பப்பேற்றிலேயே நோக்கம். அவ்வின்பம் தரும் பொருள்கள் யாவையாயினும் அவற்றோடு அதுவதுவாய் இயைந்து நுகர்வது உயிர்க்கு இயல்பு. மேலும், அது கருவிகளோடு கலந்து இயைந்தா லன்றி அறிவு விளக்கம் பெறமுடியாது. அதனால் கருவிகள் இன்ப வடிவாய் உயிரைத் தம்வயம் ஈர்த்து அறிவு பெறுவிக் கின்றன. உயிர்கள் மலக்கலப்பினால், அவை வெறும் கருவிகளே தவிர முதல் அல்ல என்று பிரித்துணராது,

அவற்றின் வழி நின்றுவிடுகின்றன. அதனால்தான் அவை ஐம்புலன்களால் வளர்ந்தும் அயர்ந்துவிடுகின்றன. கருவி களே மயக்குகின்றன என்று பெரியோர்கள் கூறுவதன் கருத்து என்ன? கருவிகள் உயிரைத் தம்வயப்படுத்தும் பொருட்டு இன்பம் நல்குகின்றன. அவ்வின்பம் இன்ப நாட்டமுடைய உயிரை மயக்கிவிடுவதால், கருவிகள் மயக்குவனவாகப் பெரியோர் கூறுவது உபசாரம்.

இங்ஙனம் உணர்த்த உணர்ந்த அரச குமாரன் வேடர் சூழலை விட்டு நீங்கி, அரசியல் சூழலை அடைந்து இன்புறுவது போல, உயிர் ஐம்புலச் சூழலை விட்டு நீங்கி முதல்வனது திருவருட்சூழலை அடைகின்றது என்பது விளங்க, "விட்டு அரன்கழல் செலுமே" என்று சொல்கிறார். கழல் அல்லது திருவடி என்பது திருவருள்.

ஆன்மாவுக்கும் அரன்கழலுக்கும் உள்ள தொடர்பு யாது? ஆன்மாக்களுக்கெனத் தனி நிலை இல்லை. ஒன்று, உலகம்; மற்றொன்று, அருள். ஐம்புலன்களோடு கூடிவாழும் உலகத் தொடர்பை விட்ட இடத்து அதற்குச் சார்பாவது திருவருளே. ஆதலால்,

**"அன்னியம் இன்மையின் அரன்கழல்**
**செலுமே"**

என்று கூறுகிறார். 'அன்னியம் இன்மையின்' என்றது, அருளின் வேறாய்ப் பிரிதொரு சார்பே இல்லை என்பதைக் காட்டுதற்காம். "சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின்" என்பதும் இக்கருத்தை விளக்குவதேயாம். 'சார்புணர்ந்து' என்பதற்குச் சார்பு உணர்த்த உணர்ந்து எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும். சார்புகெட ஒழுகுவதாவது, ஐம்புலச் சார்பை விட்டு அருட்சார்பு நன்கு எய்த ஒழுகுவ தாம்.

## ஒன்பதாவது சூத்திரம்

***ஊனக்கண் பாசம் உணராப் பதியை***
***ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி***
***உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்***
***தண்நிழலாம் பதிவிதி எண்ணும்அஞ் செழுத்தே.***

*முடிபு :* குரு உபதேசமான பின் ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக்கண்ணினில் சிந்தை நாடுக; பாசம் உராத்துணைத் தேர்த்தென ஒருவ பதி தண்நிழலாம்; அஞ்செழுத்து விதி எண்ணுக.

***பதப்பொருள் :*** ஊனக்கண் - குறைவு பட்ட இயற்கை அறிவினாலும்; பாசம் - செயற்கை அறிவினாலும்; உணராப் பதியை - அறிய முடியாத முதல்வனை; ஞானக் கண்ணினில் - ஞானகுரு உபதேசித்த நெறியினால்; சிந்தை நாடி - அறிவினில் நாடுவாயாக; நாடுங்கால்; பாசம் - உலகம், உடல், கருவி ஆகியன யாவும்; உராத்துனைத் தேர்த்தென - பேய்த் தேர் போன்று; ஒருவ - நீங்கவே; பதி தண்நிழலாம் - பதியின் தண்ணிய திருவடிக்காட்சி பெறப்படும்; அஞ்செழுத்தை - திருவைந்தெழுத்தை; விதி எண்ணும் - (காட்சி பெறுதற்பொருட்டும், பெற்ற காட்சி மறவாமைப் பொருட்டும்) முறைப்படி எண்ணுவாயாக.

***கருத்து :*** முதல்வனை எண்ணுவதற்குரிய வழி அஞ்செழுத்து என்பது கூறப்பட்டது.

# 9. இறைவனை உணரும் வழி

முற்சூத்திரத்தில் முதல்வன் குருவாய் எழுந்தருளி உபதேசம் செய்வான் என்றார். இங்கு அவ்வுபதேசப் பொருள், கை வருதற்கு உரிய நெறி முறையைக் கூறுகிறார்.

அறிவானது இயற்கை அறிவு, செயற்கை அறிவு என இருவகைப்படும். இயல்பாகவே உயிருக்குள்ள அறிவு இயற்கை அறிவாகும். இது குறைவுடையது. ஆதலின், 'ஊனக்கண்' என்கிறார். நூல் வாயிலாய்ப் பெறுகின்ற அறிவு செயற்கை அறிவு எனப்படும். அவ்வறிவும் பிற உயிர்களின் இயற்கை அனுபவத்தை எடுத்துக் கூறுபவையாதலின் அதுவும் குறைவுடையதாம். அதனைப் 'பாசம்' என்கிறார். இவ்வறிவு பேரறிவுடைய பரம்பொருளைக் காண்பதற்குக் கடைபோகத் துணை செய்யாது. உயிர், அறிவும் அறியாமையும் உடையது ஆதலின், அறிவே மயமான முதல்வனைக் காண முடியாது. ஆனால், குறைபாட்டினை உணர்ந்து குருவினது உபதேசப்படி அறிவினிலே சிந்திக்க வேண்டும். ஆகவே, "ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினில் சிந்தைநாடி" என்கிறார். 'நாடி' என்பதற்கு நாடுக என்று பொருள் கூறுவர், சிவஞான முனிவர்.

அவ்வாறு சிந்திக்கச் சிந்திக்க உலகம், உடல், கருவி முதலியவை உறுதிப்பொருள்கள் அல்ல என்று தோன்றும். ஆதலின், "உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவ" என்று கூறுகிறார். "உராத்துனைத் தேர்" என்றது கானலாகிய பேய்த் தேரினை. தேர் என்பது நான்கு சக்கர வண்டி. வெயில் காலத்தில் வெட்டவெளியில் தோன்றி ஓடும் கானல், தேர் போலத் தோன்றுவதால், அது தேர் எனப்படுகிறது. தேர்களில் மக்கள் ஊர்ந்து செல்வர். ஆனால், இந்தத் தேரில்

யாரும் ஊர்ந்து செல்லமுடியாது. ஆதலினால், "உராத்துனைத் தேர்" என்கிறார். ஊரா என்பது உரா என வந்தது. துனை என்பது வேகம். ஆகவே, ஊரப்படாத விரைந்து செல்லக்கூடிய தேர் என்பதாயிற்று. இது கானலை விளக்க வந்தது. பாசமானது பேய்த்தேரின் இயல்புடையது என்ற காட்டுவதற்கு, "தேர்த்தெனப் பாசம்" என்கிறார். கண்ணுக்குத் தூரத்தில் நீர், நிலையாய் உள்ளது போலத் தோன்றி, நெருங்கியதும் இல்லாது ஒழிவது பேய்த்தேரின் இயல்பு. அதுபோல, வாழ்வார்க்கு உறுதிப்பொருள்போலத் தோன்றிப் பயன் நோக்குமிடத்து "உயிர் வாழ்க்கைக்குக் கருவியும் இடமுமாய்க் கழிந்துபோவதால், உலகு, உடல் ஆகிய பாசம் பேய்த்தேரென எண்ணி ஒருவுக" என்கிறார்.

அங்ஙனம் பாசக்கூட்டங்களை உறுதி அல்ல என்று கழிக்கவே, இவற்றுக்கு வேறாய் அருட்காட்சி புலப்படும். அஃதாவது, அருள், ஞானம் ஆகியன உண்டாகும். அஃது உலக வாழ்வில் உழன்று வெம்பி வெதும்பும் உயிர்க்குக் குளிர்ச்சியாய் இன்பம் செய்வதுபற்றி, "தண் நிழலாம் பதி" என்கிறார். பதி என்றது பதி ஞானத்தினை.

அவ்வின்பப்பயனைப் பெறுவதற்குரிய வழியே அஞ்செழுத்தாகும். அஞ்செழுத்தாவது, சிவயநம என்பது. அஞ்செழுத்துகளும் தனித்தனிப் பொருளை உணர்த்துதலால் ஐந்து பதமெனவும் கூறப்படும்.

**"அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி"**

என்கிறார், சுந்தரரும். இவ்வைந்தெழுத்தும் முதல்வனது திருப்பெயராய்த் தியானிக்கப்பெறும். அம்முறையில் முதல்வனது திருநாமம் நமசிவாய என்பது.

**"நந்தி நாமம் நமச்சிவாயவே"**

என்பது திருஞானசம்பந்தர் வாக்கு. சிவாயநம என்பது முதல்வன் திருப்பெயர் அன்று; அஃது அவனது திருநாமத்து எழுத்து ஐந்து என்று திருநாவுக்கரசர்,

"படைக்கல மாகவுன் நாமத் தெழுத்தைந்தும்
என்நாவில் கொண்டேன்"

என்று விளங்க உரைக்கின்றார். 'சி' என்பது சிவம். அது சத்து, சித்து, ஆனந்தம் ஆகியனவாய் உள்ளது. அஃது என்றும் உள்ளதும், முற்றறிவுடையதும் பேரின்பமுடைய தும் ஆதலின், உயிர்கட்கு நிலைபேறும் நிறை அறிவும் பேரின்பமும் நல்கவல்லது. 'வ' என்பது அருள். அஃது உயிர்கட்கு உலகு, உடல், மனம் முதலிய கருவிகளைப் படைத்து அளித்து இயக்குவது. உயிர் தானாகவே உடல் முதலியவற்றை எடுத்துக்கொள்ள முடியாது. அவ்வாறு எடுத்துக்கொள்வதாயின் எல்லா உயிர்களும் நல்ல அழகான உடல்களையன்றோ எடுத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு உலகத்தில் காணப்படவில்லையே. ஆதலின், இவை யெல்லாம் ஒரு திருவருள் சக்தியினால்தான் காரியப்படு கின்றன என்பது புலனாகிறது.

"The very hairs of your head are numbered"

என்ற மேலைநாட்டு வேத மொழியையும் ஒப்பிட்டு மகிழ்க. நூற்பு ஆலையும் அதனை இயக்கும் மின்சக்தியும் போல, உடம்பும் உலகமும் அருட்சக்தியும் உள்ளன என்று உணர்தல் வேண்டும். அச்சக்தி வித்யா தேகத்தைத் தூண்டி உயிரின் அறிவு, இச்சை, செயல் ஆகிய ஆற்றலை எழுப்புவது; மானத தேகத்தை இயக்கி உயிரின் அறிவு, இச்சை, செயல் ஆகியவற்றுக்கு ஏற்ற எண்ணங்களை எழுப்புவது; அடுத்துத் தூல தேகத்தை இயக்கிச் சொல், செயல் ஆகியவற்றைச் செயற்படுத்துகிறது. 'ய' என்பது உயிர். அஃது இருள் கலந்த ஒளிப்பொருள் போல அறியாமையாகிய மலம் கலந்திருப்பது. நெய் விளக்கில் இருள் கலந்திருப்பது போல, உயிரோடு அறியாமையும் உள்ளது. ஆனால், உடம்பாலும் உலகினாலும் அன்றி உயிர், அறிவு விளக்கம் பெற்று உய்தி பெற முடியாது. அது திருவருள் சக்தியால் ஒளிமிக்க மின் விளக்குப் போல மிளிர்தற்கு உரியது. 'ந' என்பது மறைப்புச் சக்தி. அது

நிகழ்ந்ததை மறைப்பித்து, நிகழ இருப்பதை மறைத்து நேரில் நிகழ்வதை அதுவதுவாய் இயைந்து நுகரச் செய்வது. 'ம' என்பது, மலம் அல்லது அறியாமை. அறியாமைக்குக் காரணம், மாயை. மாயை என்பது உடல் முதலியவை. அதனை ஒட்டி வினை. வினை நல்வினை, தீவினை என்பன. ஆக, இவை மூன்றும் ஒன்றுக்கொன்று காரணமாய் உள்ளன. மலம் என்ற அறியாமை, உயிர் அறிவை இருள் செய்து, நெறி மாற்றிக் குற்றத்துக்கு உள்ளாக்குவது. இங்ஙனம் இவ்வைந்தெழுத்தின் பொருளினை எண்ணி அறியாமை நீங்கித் திருவருள் துணை கொண்டு பேரின்பத்தினைப் பெறவேண்டும் என்பதற்காக 'விதி எண்ணும் அஞ்செழுத்தே' என்கிறார். யகரமாகிய உயிர் நமக்களை விட்டு நீங்கி வகரமாகிய திருவருள் துணை கொண்டு சிகரமாகிய சிவத்தினை அடைய வேண்டும் என்பதாம். மாணிக்கவாசக அடிகளும் உலகமாகிய கடலினைக் கடக்க அஞ்செழுத்தாகிய தெப்பத்தினைப் பற்றிக்கொண்டிருக்கிறேன் என்கிறார்.

**"அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கடக்கின்றேனை"**

என்பது அவர் மணிவாக்கு.

## பத்தாவது சூத்திரம்

*அவனே தானே யாகிய அந்நெறி*
*ஏக னாகி இறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.*

**முடிபு :** ஞானக்கண்ணால் சிந்தையில் நாடப்பட்ட அவனே தானேயாகிய அந்நெறியை எண்ணி ஏகனாகி இறைபணி எனக் கருதி நிற்க மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே.

**பதப்பொருள் :** அவனே தானேயாகிய - சிந்தையில் நாடப்பட்ட அம்முதல்வன் உயிரை முன்னிறுத்தித் தான் பின்னே நிற்பதாகிய, அந்நெறி - அம்முறையை மேற் கொண்டு; ஏகன் ஆகி - அவனை முன்னிறுத்தித் தான் அவனுள் ஒடுங்கி; இறைபணி (என) நிற்க - நினைவு, சொல், செயல் ஆகியன எல்லாம் முதல்வன் செயல் என்று எண்ணி அவ்வழி நிற்பாயாக, நின்றால்; மலம் மாயை தன்னோடு - அறியாமையைச் செய்யும் மலமும் அதன் காரணமாய் வரும் பிறவியும்; வல்வினை - வலிய வினையும்; இன்றே - இல்லையாய் ஒழியும்.

**கருத்து :** திருவருள் வழி நின்றால் வினையும், வினையால் வரும் துன்பமும் இல்லையாம் என்பது கூறப்பட்டது.

## 10. இறைநெறி நிற்க மும்மலம் அகலும்

முற்சூத்திரத்தில் ஞானக்கண்ணினில் சிந்தை நாடி நிற்கும் முறையைக் கூறினார். இங்கு அங்ஙனம் நிற்பதனால் உண்டாகும் பயன் கூறுகிறார்.

அங்ஙனம் ஞானக்கண் கொண்டு சிந்தையில் நாடும் பொழுது அவன் உடனாய் நிற்கும் நிலை தோன்றும்.

**"எங்கே போவே னாயிடினும்**
**அங்கே வந்தென் அகத்தீராய்"**

என்றும்,

**"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு**
**இங்கேயென் றருள்புரியும் எம்பெருமான்"**

என்றும்,

**"யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே"**

என்றும் பெரியோர்கள் ஞானத்தால் கண்டு உரைப்பன காண்க. "புறம்புறம் திரிந்த செல்வமே"

**"வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்**
**வஞ்சித்தோம் என்று மகிழன்மின் - வஞ்சிக்க**
**எங்கும்உளன் ஒருவன் இருக்கின்றான் என்றெண்ணி**
**அங்கம் குலைவது அறிவு"**

என்ற குமரகுருபர சுவாமிகள் வாக்கும் நினைவுகூரத்தக்கது. அவன் உடனாய் நிற்பதை உணர்ந்தவிடத்து, அவன், முன்னே உள்ளானா, பின்னே உள்ளானா, பக்கத்தே உள்ளானா என்ற வினாவுக்கு விடை கூறுவதுபோல, பக்கத்திலோ முன்னோ இல்லாமல் உயிரை முன்னே

நிறுத்தித் தான் அவ்வுயிரினுள்ளே அடங்கி நிற்கின்றான் என்பது விளங்க, "அவனே தானே யாகிய நெறி" என்று குறிப்பிடுகின்றார். இவ்வுண்மையைத்தான்,

**"எங்கே போவே னாயிடினும்**
**அங்கே வந்தென் அகத்திராய்"**

என்றும்,

**"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு**
**இங்கேயென் றருள்புரியும் எம்பெருமான்"**

என்றும் வரும் அருளுரைகள் காட்டுகின்றன. உயிர்கள் மண்ணகத்தே தோன்றி வாழ்ந்தாலன்றி உய்தி இல்லை என்ற திருக்குறிப்பினால்தான், உயிர்களை முன்னிறுத்தி வாழச்செய்வது இன்றிமையாமை ஆயிற்று. கணக்குக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர் கணக்கைக் கொடுத்துப் போடச் செய்கிற பொழுதுதான் பின்னே நின்று காட்டுவது உலகியலில் கண்டது. அதுபோல, ஞானாசிரியனாகிய முதல்வனும் வாழ்க்கையில் உயிர்களுக்குப் பின்னே நின்று இயக்குகிறான் என்று உணர்தல் வேண்டும். இங்ஙனம் உயிரை முன் உய்த்துப் பின்னே இருக்கும் நெறியைத்தான் 'அந்நெறி' என்று ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார்.

இனி, முன்னின்று தன்முனைப்போடு வாழும் உயிர் யான், எனது என்னும் பற்றுகளுக்கு உள்ளாகிப் பல்வகைத் துன்பங்களை அடைகிறது. அவ்வப்போது முதல்வன் அறிவொளி நல்கியும் தன்முனைப்பால் அதனை உயிர் புறக்கணிக்கிறது. இவ்வாறு துன்பங்கள் அடுக்கி வந்து சுடுகிறபொழுது, பின் நின்று செலுத்தும் முதல்வனை உணர்கிறது. அத்துன்பங்களினின்றும் நீங்குவதே அதற்கு நோக்கமாதலால், பின் நின்று உதவும் முதல்வனை முன்னே நிறுத்தி, அவனது முதன்மையில் தான் ஒடுங்குவதே உண்மை நெறியாகும் என்று உணர்கிறது. அதுபற்றித்தான் அந்நெறி **ஏகனாகுக** என்று அறிவுறுத்துகின்றார்.

இங்ஙனம் ஏகனாதலே நெறி என்று கண்ட உயிர் அதனைச் செயற்படுத்துவது எங்ஙனம்? தன்முனைப்பற்றுத் தன்செயலற்று, தன் நினைவு, சொல், செயல் ஆகியன வெல்லாம் நாதன் செயல் எனக் கையொழிதல் வேண்டும். அஃதாவது, எழுகிற எண்ணங்கள், சொல்லுகின்ற சொற்கள், செய்கிற செயல்கள் யாவும் முதல்வன் செயல் என்று எண்ணி ஒழுகுதல் வேண்டும்.

**"கூறு நாவே முதலாகக்**
**கூறுங் கரண மெல்லாநீ**
**தேறும் வகைநீ திகைப்புநீ**
**தீமை நன்மை முழுதுநீ"**

என்பது, திருவாசகம். இங்ஙனம் சொல்லுவது எளிது, செயற்படுவதுதான் அரிது என்று எண்ணலாம். ஆனால், அதற்கு ஒரு வழி உண்டு. வாழ்க்கையிலே சிறிய இடையூறு, சிறிய துன்பம் ஆகியன உண்டாகும்பொழுது, அவை முதல்வனது ஆணைப்படி உண்டாகின்றன என்று எண்ணிப் பழக வேண்டும். இதுபற்றிப் பல அறிஞர்கள் சிந்தித்துள்ளனர்.

"Begin therefore in the smallest matters and most ordinary occasion and accustom your mind to the daily exercise of this pious temper in the lowest occurence of life" (Willim Law) என்பது மேலைநாட்டு அறிஞர் வாக்கு. இங்ஙனம் எண்ணிப் பழகிய பின்னர்ப் பெரிய இடையூறும் பெருந்துன்பமும் வந்த போதும் அவற்றையும் முதல்வன் செயல் எனக் கருதும் மனப்பான்மை உண்டாகும். இதுவே இறைபணி என நிற்பதற்குரிய வழியாகும். சமணர்கள் செய்த கொடுமை களை எல்லாம் திருநாவுக்கரசர், "**இவை** ஈசன் எந்தை இணையடி நிழலே" என்று எண்ணியும் சொல்லியும் மகிழ்ந்தது உலகம் அறியும். எனவே, முதல்வனது செயல் என எண்ணி அமைவதையே, 'இறைபணி நிற்க' என்கிறார்.

இனி, இவ்வாறு நிற்பதால் என்ன பயன்? நாடோறும் செய்கின்ற வினையினால் வரும் துன்பங்கள் உண்டாகா;

மேல் வினையும் ஏறாது. அஃது எங்ஙனம் முடியும் என்று எண்ணலாம். உதாரணமாய் நீதிபதி ஒருவர் கொலைஞன் ஒருவனுக்குத் தூக்குத்தண்டனை விதிக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். நீதியின்படி அளித்த தீர்ப்பு ஆதலின் கொலைக்குற்றம் நீதிபதியைச் சாராது. அதைப்போல, முதல்வன் ஆணைப்படி செய்யும் செயலால் வரும் பயனும் உயிரைச் சாராது. எல்லாம் முதல்வனே ஏற்றுக்கொள்வான் என்பதாம்.

**"நம்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்**
**தன்செயல் தானேஎன் றுந்தீபற"**

என்ற திருவுந்தியார் பாடல் இக்கருத்தைத் தெளிவு செய்கிறது. ஆதலின், வினையின் தொடர்பு இல்லையாய் ஒழியும். வினை நீங்கவே அது காரணமாய் வரும் மாயா காரியச் சார்பாகிய பிறப்பு நீங்கும். அதனால்தான் "மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே" என்று சொல்லுகிறார்.

## பதினோராவது சூத்திரம்

**காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்**
**காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா அன்பின் அரன்கழல் செலுமே.**

**முடிபு :** காணும் கண்ணுக்குக் காட்டும் உள்ளம் போல், உள்ளத்துக்குக் காண அரன் காட்டி அவனும் உடன் காண்பதனால் இறைபணி நிற்கும் உள்ளமாகிய ஆன்மா அரன் கழல் செலும்.

**பதப்பொருள் :** காணும் கண்ணுக்கு - காணும் தன்மையுடைய கண்ணுக்கு; காட்டும் உளம்போல் - காட்டிக் காண்கின்ற உயிரைப்போல்; காண - உயிர் காணும் பொருட்டு; உள்ளத்தைக் காட்டிக் காண்டலின் - உயிருக்குப் பொருள்களைக் காட்டி முதல்வன் தானும் உடன்நின்று காண்கின்றான். ஆதலின், அத்தன்மையினை நினைந்து; அயரா அன்பின் - அவ்வழித் தோன்றும் இடையறாத அன்பினால்; அரன் கழல் செலும் - அம்முதல்வன் திருவடியை உயிர் சென்று சேரும்.

**கருத்து :** முதல்வனிடத்தில் அன்பு செலுத்தலால் வீடுபேறு எய்தலாம் என்பது கூறப்பட்டது.

# 11. இறையன்பால் உயிர் எய்தும் பேரின்பம்

முற்சூத்திரத்தில் உயிர் ஏகனாகி இறைபணி நிற்றலால், மலம், மாயை, வினை ஆகியன நீங்கும் என்றார். அவை நீங்கினவிடத்து உயிர் எய்தும் பேரின்பத்தினை இச்சூத்திரத்தில் கூறுகிறார்.

ஐம்பொறிகளுள்ளும் கண் மிகச்சிறந்த கருவியாகும். அது, எதிர்ப்படும் பொருள்களைக் காண வல்லது. அன்றியும், எதிர்ப்படும் பொருள் இருக்கும் தூரத்துக்கும், அதன் வடிவத்துக்கும், அதன்மேற்படும் ஒளிக்கும் ஏற்றவாறு குவிந்தும் விரிந்தும் செயற்படும் திறமுடையது. எனினும், கண்ணும் கண்ணுள் இருக்கும் உறுப்புகளும் தாமே இயங்குவன அல்ல. அவை உயிர் இயக்க இயங்குவன. கண்ணானது உயிரினால் செலுத்தப்படுவதோடு அவ்வுயிர் உடன் கலந்து நின்றாலன்றிக் காணுதலாகிய தொழிலைச் செய்யாது. அதனால்தான், "காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்" என்கிறார் ஆசிரியர்.

அதே போல், உயிருக்குக் காட்டுகிற ஒரு பொருள் உண்டு. அது பரம்பொருள். அஃது உயிருக்கு ஒரு பொருளைக் காட்டுவதோடு உடனிருந்து காணவும் செய்கிறது. அப்பரம்பொருள் காட்டுவது அமையும், காண்பது ஏன் என்னும் வினா எழலாம். கணக்கு ஆசிரியர் ஒருவர் மாணாக்கனுக்கு வகுப்பில் கணக்குப் போட்டுக் காட்டுகிறார். காட்டுவதோடு உடனிருந்து போடுவதைக் காணவும் செய்கிறார். அவ்வாறு காணவில்லையானால் மாணாக்கன் தவறு செய்துவிடலாம். அது போல, முதல்வன்

பொருளைக் காட்டுவதோடு உடனிருந்து காணவும் செய்கிறான். அது எங்ஙனம் எனில், விஞ்ஞானி ஒருவர் ஓர் உண்மையைக் காண முயல்கிறார். பல நாள், பல முறையில் அவரது ஆராய்ச்சி நடக்கிறது; தெளிவு பெறவில்லை. ஆனாலும், விடாது முயலுகிறார். முடிவில் அவரது உணர்வுக்குள் ஓர் அருள் ஒளி தோன்றி உண்மை நெறியைக் காட்டுகிறது. இதுவே காட்டும் உபகாரம் எனப்படும். இனி, அவ்வருள்ஒளி உடனிருந்து, ஒழுங்கு பெற ஆராய்ச்சி நடைபெறுதற்கும் வெற்றி காண்பதற்கும் உதவுகிறது. இது காணும் உபகாரம் எனப்படும். முதல்வனது இவ்விருவகை உபகாரந்தான் இன்றைய விஞ்ஞானிகள் புதிய புதிய உண்மைகளைக் கண்டுபிடித்து உதவுவதற்குக் காரணமாகும். இஃது எல்லா விஞ்ஞானிகள் வாழ்விலும் காணப்படும் சிறந்த ஓர் உண்மையாகும். அன்றியும், இவை எப்பொழுதும் எவ்விடத்தும் நடந்து கொண்டிருப்பவை என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். ஆகவேதான் "காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்கிறார். காரைக்கால் அம்மையாரும்,

> **"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே**
> **அறிவாய் அறிகின்றான் தானே"**

என்று அற்புதத் திருவந்தாதி என்ற அருநூலில் கூறுகிறார். முதல்வன் அறிவிப்பதோடு தானும் உடனிருந்து அறிவாய் அறிகின்றான் என்பது இவ்வடிகளால் விளங்குகின்றது. "கண்டு காட்டலின்" என்பதைக் "காட்டிக் காண்டலின்" என்று மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது. இதனால், முதல்வன் உயிர்கள்பொருட்டுக் காட்டுவதும் உடனிருந்து காண்பதும் செய்கிறான் என்பது பெறப்படும்.

முதல்வனது இவ்விருவகை உபகாரத்தினையும் நினையுமிடத்து அவன்பால் உயிருக்கு அளவிறந்த அன்பு உண்டாகும். ஏன் எனில், உதவி செய்தாரிடத்தில் உதவி

பெற்றவர் பேரன்பு செலுத்துவது இயற்கை. முதல்வன்பால் செலுத்துகின்ற அன்பே ஞானம் என்பார், சேக்கிழார். "ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்" என்பது அவரது திருப்பாசுர உரை. ஞானம் வீடுபேற்றை நல்கும் என்பது யாவர்க்கும் உடன்பாடு. "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் ஓதுகின்றன" என்பர், அருள்நந்திசிவம். ஆதலால், "அன்பின் அரன்கழல் செலுமே" என்கிறார்.

## பன்னிரண்டாவது சூத்திரம்

**செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா**
**அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ**
**மாலற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.**

**முடிபு :** தாள் சேரல் ஒட்டா மலம் கழீஇ; அன்பரொடு மரீஇ; வேடமும் ஆலயமும் அரன் எனத் தொழும். கழீஇ, மரீஇ என்ற வினையெச்சங்களை முற்றாக்கிக்கொள்க.

**பதப்பொருள் :** செம்மலர் நோன் தாள் - முதல்வனின் செம்மையான மலர் போன்ற வலிய திருவுடைய; சேரல் ஒட்டா - நினைய ஒட்டாமல் தடுக்கின்ற; அம்மலம் - அந்த ஆணவ மலத்தை; கழீஇ - நீக்குக; அன்பரொடு மரீஇ - முதல்வனது இருவகை உபகாரமும் நினைந்து அன்பு செய்யும் நன்மக்களோடு கலந்து உறவு கொள்க; நேயம் மாலற மலிந்தவர் - ஞாதுரு ஞான ஞேயங்களுள் சிறந்ததாகிய நேயம் மயக்கமற நிறைந்த பெரியோர்களையும்; வேடம் - அவரது வேடத்தையும்; ஆலயம் தானும் - திருக்கோயில்களையும்; அரன் என - சிவபரம்பொருள் என்று தெளிந்து; தொழும் - தொழுக.

**கருத்து :** அடியார் வழிபாடும், ஆலய வழிபாடும் இன்றியமையாதவை எனக் கூறப்பட்டன.

## 12. அடியார் வழிபாடும் ஆலய வழிபாடும்

முற்சூத்திரத்தில் முதல்வனது இருவகை உபகாரத்தையும் நினைந்து அயரா அன்பினால் அரன் கழல் செல்வோரைக் குறிப்பிட்டார். இங்கு அத்தகைய அன்பர்களோடு கூடி அரன் கழலை வழிபட வேண்டும் என்று கூறுகிறார்.

முன்பு எட்டாம் சூத்திரத்தில், ஞானாசிரியனால் ஞானம் அருளப்பெற்ற ஆன்மா, பொருளாகிய பாசச் சார்பிலிருந்து நீங்கி, வேறு சார்பு இல்லாமையால் திருவருட்சார்பாகிய முதல்வன் திருவடியையே அடையும் என்று உணர்த்தற்கு "அரன் கழல் செலுமே" என்று ஆசிரியர் அறிவுறுத்தினார். பின்பு, பதினோராம் சூத்திரத்தில், தான் பெற்ற சிவஞானப்பயிற்சியால் ஆன்மா, தன் பொருட்டு முதல்வன் கண்டும் காட்டியும் உபகரிக்கும் அருட் செயல்களை உணர்ந்து, அயரா அன்பு செய்து, "அரன் கழல் செலுமே" என்று அருளினார். இங்ஙனம் ஒரு முறைக்கு இருமுறை அரன் திருவடியையே முடிபாய்ச் சுட்டினாராதலால் அதனைக் கேட்கும் ஆன்மா அத்திருவடியின் சிறப்பை அறிய ஆர்வம் உறுவதால் அதைக் காட்டுவதற்கு இங்கே "செம்மலர் நோன்தாள்" என்று தெரிவிக்கிறார். முதல்வன் திருவடியே ஆன்மாக்கட்கு முடிவிடம் என்பதைப் "பற்றற்றார் பற்றும் பவள அடி" என்று ஞானாசிரியரான நாவுக்கரசர் நவில்வது காண்க.

முதல்வனது திருவடியை மலர் எனப் பொதுப்படக் கூறியதனால், தாமரை கொள்ளப்படும். "பூவினுக்கு அருங்கலம், பொங்கு தாமரை" என்பர், திருநாவுக்கரசர். மலர், வண்ணமும் ஒளியுமுடையது. ஆனாலும் தாமரைக்குக் குவிதலும் மலர்தலும் ஆகிய குறையுண்டு.

முதல்வன் திருவடியோ வண்ணமும் ஒளியுமுடையதாயினும் குவிதலும் விரிதலும் இல்லாதது. குவிதல் விரிதல் இல்லாமல் ஒரு தன்மைத்தாவதுதான் செம்மை. அது பற்றித்தான் "செம்மலர்" என்கிறார். மலர் போன்றது என்றலுமே மென்மைத்தன்மை நினைவுக்கு வரும். இறைவன் திருவடி தன்னைச் சேர்ந்தோரை மீளாமல் தன் நீழற்கண்ணே நிலைபெறச் செய்யும் வன்மையுடையது. அதனால் . திருவடியை நோன்தாள் என்று கூறுகிறார். நக்கீரரும் "உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்" என்பர். "மேவினார் பிரியமாட்டா விமலனார்" (கண்ணப்பர் புராணம்) என்று சேக்கிழார் கூறுவது நினைவுகூரத் தக்கது. இத்துணைச் சிறப்புப் பொருந்திய திருவடியைச் சேர விடாமல் தடுத்து நிறுத்துவது, மலம்! அதன் செயல், அறிவை மறைப்பதும், உதவியை மறக்கச்செய்வதும் ஆகும். மறைப்பும் மறப்பும் எப்பொழுதும் நேர்வழியில் செல்லும் உயிரைத் தவறு செய்யப் பண்ணுகின்றன. மண்ணக வாழ்வு மிகச்சிறந்தது; அறிவு பெற்று உய்தி பெறுவதற்குரிய நெறியைக் காட்டவல்லது; பூமியானது உயிர்கள் செம்மையாய் வாழ்வதற்காக அமைக்கப்பட்ட ஒரு படைப்பாகும். "பூமிசிவன் உய்யக் கொள்கின்ற ஆறு" என்பது, திருவாசகம். எனினும், அநாதியாயுள்ள மலப் பிணிப்பால் உயிர்கள் இறைவனது நோன்தாளைச் சென்றடையாமல் நெறி தவறிச் செல்கின்றன. அதன் பயனாய்த் துன்பத்துக்கு ஆளாகின்றன. எதிர்காலத்தை மறைத்து, இறந்த காலத்தை மறப்பித்து நிகழ்காலத்திலும் உள்ளத்தில் நல்ல நினைவுகள் தோன்றாதபடி செய்வது, மலம். "தூய நினைவைத் தூமொழியைத் தூய செயலைத் தோற்றாது, தீய நினைவைத் தீ மொழியைத் தீயசெயலைத் தவத் தோற்றும் மாய ஆணவப் பகை" என்று கச்சியப்ப முனிவர் விளக்குவது இங்கே காணத்தக்கது. இதனால் ஞானவொளி பெற்றவிடத்தும், முதல்வன் திருவடியைச் சேர வொட்டாமல் நினைவையும் சொல்லையும் செயலையும் மாற்றிவிடுவதுபற்றி "நோன்தாள் சேரலொட்டா அம்மலம்"

என்றும், அதன் கொடுமை விளங்குவதற்கு, "அம்மலம்" என்று சுட்டியும் ஆசிரியர் அறிவுறுத்துகின்றார்.

இவ்வாறு என்றும் ஒரு தன்மைத்தாகும் செம்மையும், தன்னை அடைந்தார்க்கு இன்பங்கள் நல்கும் மென்மையும், தன்னை மேவினாரை மீண்டும் பிறவிக்குட்புகாதவாறு தாங்கும் நோன்மையும் உடைய திருவடியை அடைவதே "செய்யத்தக்க செயலாவது" என உணர்ந்த வழியும், செய்ய விடாமல் தடுக்கும் "நோன்தாள் சேரல் ஒட்டா" அம் மலத்தை வலியழித்து அறிவைத் தடுக்காதபடி கெடுப்பதே ஆன்மா செய்ய வேண்டிய பணியாகும். அம்மலத்தை எவ்வாறு நீக்கலாம்?

நமக்கு இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின்றன. ஆனால், இன்பத்தில் மயக்கமும், துன்பத்தில் கலக்கமும் உண்டாகின்றன. ஆயினும், நாம் அறிவு மயங்காமல் துன்பஇன்பங்களின் காரணத்தை எண்ணி அறிய வேண்டும். இன்பத்தில் மறந்தாலும் துன்பத்தில் சிந்தனையைத் தூண்டுவது எளிது. துன்பம் ஏன் வந்து சுடுகிறது என்று சிந்திக்க வேண்டும். அவ்வாறு சிந்திக்கச் சிந்திக்க உண்மை ஒளி தோன்றும். இச்சிந்தனைதான் மலத்தைக் கழுவும் நெறியாகும். இவ்வாறு கழுவவே முதல்வனது உபகாரம் நினைவுக்கு வரும். இங்ஙனம் சிந்தனை வளர்ச்சியாலும், ஞாபக சக்தியாலும் மலத்தின் ஆற்றலைக் குறைக்கலாம்.

மலத்தின் வியாபகத்தையும் ஆற்றலையும் சாத்திரங் கள் எடுத்துரைப்பதைப் படிக்கும்போது, இதனை எவ்வாறு மாற்றுவது என்று நமது அறிவு மலைக்கிறது. அது எவ்வளவு ஆற்றலுடையதாயினும் திருவருள் துணையால், கண்ணாடியில் படிந்த மாசு எளிதில் துடைக்கப்படுவது போல போக்கப்படும். வெள்ளிப்பாத்திரத்தில் ஒட்டிய அழுக்குப் போலக் கழுவப்படும் என்பதற்காகத்தான் ஆசிரியர், 'அம்மலம் கழுவுக' என்று உரைக்கிறார்.

சுருங்கச் சொன்னால், காரண காரிய ஆராய்ச்சியாகிய நீரால் அம்மலத்தைக் கழுவுதல் வேண்டும் என்பதாம். அதுபற்றியே "செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா அம்மலம் கழீஇ" என்று ஆசிரியர் நாம் செயற்படுமாறு கூறுகிறார். மலம் என்று கூறாது, 'அம்மலம்' என்று சுட்டியது, முதற்சூத்திரத்திலும், நான்காவது சூத்திரத்திலும் கூறப்பட்ட மலம் என்பதை நினைவுகூர்வதற்காகவும் எடுத்தும் படுத்தும் கூறிய வழி அதன் வன்மையும் மென்மையும் புலப்படுவதற்காகவுமாம். உலகப்படைப் புக்குக் காரணம் மலம் என்பது முதற்சூத்திரத்தாலும், உயிரொடு கிடந்து அறிவை மறைப்பது மலமென்பது நான்காவது சூத்திரத்தாலும் அறியப்பட்டனவாம்.

இந்த மலத்துக்கு மற்றொரு தன்மையுண்டு. குளம், குட்டைகளில் படிந்திருக்கும் முட்டைப்பாசிபோல அறிவை மறைத்திருக்கும், இந்த மலம். தொட்ட வழி நீங்கி, விட்ட வழிப் பரந்து மூடும் பாசிபோல, அறிவாராய்ச்சி செய்த வழி நீங்கி, விட்ட வழி அறிவை மூடிக்கொள்ளும். அது மீண்டும் தாக்காமல் இருப்பதற்கு இறைவனின் இருவகை உபகாரங்களையும் எண்ணி, அயராது அன்பு செய்து, அரன் கழலையே எண்ணுகின்ற அன்பர்கள் கூட்டத்தைச் சேரவேண்டும். அதனால், மலத்தின் மறைப்பு விலகியே நிற்கும். எங்ஙனமெனில், இத்தகைய அன்பர்கள் முதல்வனது திருவருளையே இடையறாது எண்ணிக் கொண்டிருப்பார்கள்; அறிவாராய்ச்சியால் மறதியும் மறைப்பும் அற்றவர்கள் அவர்களோடு கூடுவதால் மலத்தி னால் உண்டாகும் மறதியும் மறைப்பும் இல்லையாம். ஆகவே, 'அன்பரொடு மருவுக' என்று கூறுகிறார். மாணிக்க வாசக அடிகள், இம்மை வாழ்வுக்கு இதனையே சிறந்த பேறாய் எண்ணி,

**"அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்"**

என்று பொன்னம்பலக்கூத்தனை வேண்டுகிறார். திருவருள் அறிவு ஆராய்ச்சியால் இறைவனது உபகாரத்தை எண்ணி

அவன்பால் அன்பு செய்பவரை அன்பர் என்றும், பக்தர் என்றும், ஞானிகள் என்றும் கூறுவர். "ஞானம் ஈசன் பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்" என்று சேக்கிழார் அடிகள் உரைப்பதால், அன்பரை ஞானிகள் என்றும் அடியவரென்றும் பெரியோர் கூறுவதைக் காணலாம். அடி என்பது திருவடி ஞானம். "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்" என்பர், சேக்கிழார். அன்புபற்றி இறைவனுக்கும் ஏனை உயிர்கட்கும் தொண்டு செய்பவரைத் தொண்டரென்று கூறுவர். அன்பும் ஞானமும் வெளிப் படுவது செய்யப்படும் தொண்டு ஒன்றனாலேயாம். அதுபற்றியே ஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள் தொண்டர்களையே பெரிதும் எடுத்து மொழிகின்றனர். "விண்டொழிந்தன நம்முடைய வல்வினை..... தொண்டர் தொண்டரோடு இனிது இருந்தமையால்" என்பர், ஞான சம்பந்தர்; தொண்டருக்குத் தொண்டராதல் சிவபுண்ணியம் என்பர், நாவரசர். இதனையடுத்து அடியவர் வேடத்தைக் கூறுகின்றார்.

காண்பான், காட்சி, காட்சிப்பொருள் ஆகிய மூன்றை யும் ஞாதுரு, ஞானம், ஞேயம் என்று வடமொழியில் கூறுவர். ஞானத்தால் தெளியப்படுவது ஞேயம் அல்லது நேயம். அதுவே சிவமாகிய மெய்ப்பொருள். அம்மெய்ப் பொருளை மயக்கமற உணர்ந்தவர்களே சிவஞானிகள். அவர்கள் மேனியில் சிவஞானத்தின் ஒளி பரவி, காண்பவர் உள்ளத்தில், அடியற்ற மரம்போல் வீழ்ந்து வணங்கிட வேண்டும், வாயால் வாழ்த்திட வேண்டும் என்ற உணர்வை எழுப்புகிறது. அதுபற்றியே அவர்களை "நேயம் மால் அற மலிந்தவர்" என்று ஆசிரியர் குறிக்கின்றார். அடியார் வேடம் பூண்டு அடாதன சொல்லிய முருகப்பெருமானை நோக்கி வள்ளிநாயகியார், "நேயம் மலி மெய்யடியார் நேர்ந்துழியும் நின்போல், மாயமென உள்ளும் ஒருவான் பழியும் வைத்தாய்" (தணிகை, களவு) என்று கூறுவதில் "மாலற நேயம் மலிந்தவர்" என்ற தொடர் அமைந்து கிடப்பது இங்கே நினைவுகூரத்தக்கது.

அரசவேடம் பூண்டவனுக்கு அவனது மேனியும் புறத்தே அணியும் ஆடை அணிகலன்களும் அரசத் தன்மையை நினைப்பிக்கும். அதுபோல, மெய்யடியார்களின் மேனியும், அணியும் திருநீறும், கண்டிகையும் பிறவும் சிவத்தை நினைப்பித்து, காணும் அன்பர்களை மகிழ்வித்து வணங்கி வழிபடச்செய்யும். அதனால் "மாலற நேயம் மலிந்தவர்களை அரன்எனத் தொழுமே" என்று கூறுகிறது, இச்சூத்திரம். சிவம் வேறு, அவர்கள் வேறு என்று நினையாமல், சிவனெனவே தேறி வழிபட வேண்டும் என்பதாம்.

அடுத்து, ஆலய வழிபாடு கூறுகிறார். ஆலயம் என்பது, அகத்தே திருக்கோயிலும் அதனைச் சுற்றித் திருமதிலும் கொண்டு அகன்று உயர்ந்த வாயிலும் உடையது. இதனை,

**"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்**
**வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே"**

(திருமந்திரம் 1792)

என்பதனால் அறிக. நாவுக்கரசரும், காயமே கோயில் என்றும், மணமணி சிவலிங்கமென்றும் குறித்தருளுகின்றார். நேயம் மலிந்தவர் நடமாடும் ஆலயம்; இது நடமாடாத ஆலயம். இந்த ஆலயத்தையும் சிவனென்று தேறி வழிபட வேண்டும். வழிபாட்டுக்குச் செல்வோர் கோபுர வாயில் வழியாய் உள்ளே சென்று, வலம் வந்து, கொடி மரத்தின் வழியாய் உள்ளே புக வேண்டும். மகாமண்டபம் கடந்து அர்த்த மண்டபத்துக்குச் சென்று, கர்ப்பக்கிருகத்தில் உள்ள திருமூலப்பெருமானை அருச்சனை செய்து வழிபட வேண்டும். பின்னர்க் கொடிமரத்தின் பக்கத்தே அமர்ந்து தியானம் செய்ய வேண்டும். உடம்பில் உள்ள மூலாதாரம், சுவாதிஷ்டானம் (குறித்தானம்), மணிபூரகம் (நாபித்தானம்),

அனாகதம் (இதயம்), விசுத்தி (கழுத்து), ஆக்ஞை (புருவ நடு) ஆகிய ஆறு ஆதாரங்களிலும் கோயிலிலுள்ள ஆறு இடங்களாய்க் கருதி, ஆங்காங்கு திருமூலட்டரை வணங்கி வழிபட வேண்டும். அகவழிபாடு என்பது, அஞ்செழுத்தை ஓதுதலாம். அப்பொழுது மனத்தின் துள்ளல் அடங்கும். அதுவே ஞானம் என்பதாம்.

மேலும், இங்கே குறிப்பிட்ட வழிபாட்டில் சைவத் துக்கே சிறப்பாய் உரிய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் நெறியாய் உள்ளன. கோயிலை வலம் வருதல், சரியை; அருச்சனை புரிதல், கிரியை; கொடி மரத்தின் கீழிருந்து தியானம் செய்தல், யோகம்; பரம்பொரு ளோடு ஒன்றுகின்ற நிலை, ஞானம். திரிகூடராசப்ப கவிராய மூர்த்திகள்,

**“தரையின் ஆலயம் வலம்முதற் திருப்பணி சரியை;**
**கிரிசன் என்பிரான் அருச்சனை புரிவது கிரியை;**
**ஒருமை யுள்ளுறத் தியானமுற் றிருப்பது யோகம்;**
**பொருவி லானுடன் இரண்டறக் கலப்பது போதம்.**

(திருக்குற்றாலத் தலபுராணம்)

என்ற பாடல் நன்கு விளக்குவதுபோல் அமைந்துள்ளது. இவ்வாறு ஆலயத்தினைக் கண்டபோது அதனை அரன் எனவே வழிபட வேண்டும். ஆகவே, ‘ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே’ என்று கூறுகின்றார். இக்கருத்துப் பற்றியே திருஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள்தாம் சிவஞானம் பெற்ற செல்வராகியபோதும் அடியார் கூட்டத்தோடு தலங்கள்தோறும் சென்று வழிபட்டார்கள் என்ற உண்மையும் இங்கு நினைவுகூரத்தக்கது.

ஆலய வழிபாட்டை இறுதியில் கூறியதற்கு மற்றொரு காரணமும் உண்டு. இச்சூத்திரம் சிவஞானிகட்குக் கூறியது போல் தோன்றினும், சிவஞானம் பெற முயல்பவர்கட்கும் இது வழியாகும். ஆலய வழிபாட்டில் வலம் வருவதால் மலமறைப்பு நீக்குதற்கேற்ற மந்ததர அறிவுப்பக்குவம்

உண்டாகும்; கிரியையால் மந்த பக்குவமும், யோகத்தால் தீவிர பக்குவமும், ஞானத்தால் தீவிர தர பக்குவமுண்டாகிச் சிவஞானம் விளங்குவதற்குத் துணை செய்யும். இங்ஙனம் இவை ஒன்றுக்கொன்று காரண காரியமாய் அமைந்திருப் பதால், தாயுமானவர்,

**"விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்**
**அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே"**

என்று கூறுகின்றார். இங்ஙனம் இருமையும், இன்ப வாழ்வு பெறுவதற்குரிய அறிவை நல்குவதால், ஆலய வழிபாடு இன்றியமையாது என்பதுபற்றியே "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்று அறிவுறுத்துகிறார், ஔவையார். இதுதான் வையத்து வாழ்வாங்கு வாழும் வழிமுறை.

## அவையடக்கம் அல்லது நூற்பயன்

**தம்மை உணர்ந்து தமையுடைய தன்உணர்வார்**
**எம்மை உடைமை எமைஇகழார் - தம்மை**
**உணரார் உணரார் உடங்கியைந்து தம்மில்**
**புணராமை கேளாம் புறம்.**

**முடிபு :** தம்மை உணர்ந்து தன்னை உணர்வார் எம்மை உடைமையால் எம்மை இகழார்; தம்மை உணரார் உணரார்; உடங்கு இயைந்து தம்மில் புணராமையால் புறம் கேளாம்.

**பதப்பொருள் :** தம்மை உணர்ந்து - உயிர்களாகிய தமது இயல்பை இதுகாறும் போதிக்கப்பட்ட சிவ ஞானத்தால் உணர்ந்து; தமையுடை தன் உணர்வார் - தமக்கு உலகு, உடல், கருவி ஆகியவற்றை உதவிய முதல்வனை உணர்ந்து அன்பு செய்யும் பெரியோர்; எம்மை உடைமை - எங்களையும் தம்மைப்போல் அன்பு செய்வர் என்று உணர்தலால்; எமை இகழார் - எம்மை வேறாய்க் கருதிப் புறக்கணிக்க மாட்டார்கள்; தம்மை உணரார் - தம்மியல்பை இவ்வாறு உணராதவர்கள்; உணரார் - எங்களுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை உணரமாட்டார்கள்; உடங்கு இயைந்து தம்மில் புணரார் - உணராமையோடு அவர்களும் தம்மில் அன்பால் ஒன்றுபட்டு வாழவும் மாட்டார்கள். ஆதலால்; புறம் - அன்பு நெறிக்குப் புறம்பாய் அவர்கள் பேசும் கொள்கைகளையும் சொற்களை யும்; கேளாம் - பொருளாய்க் கொள்ளமாட்டோம்.

**கருத்து :** சிவஞானந்தான் மக்களிடையே அன்பும் ஒற்றுமையும் உண்டாக்க வல்லது என்பது கூறப்பட்டது.

இத்திருவெண்பாவை மெய்கண்ட தேவர் தாம் உரைக்கும் சிவஞானபோதத்துக்கு அவையடக்கமாய்க் கூறினார் என்பது மரபு. எனினும், இது சிவஞான போதம் என்ற இம்மெய்ந்நூலின் சாரமெல்லாம் திரட்டி, முதல் இரு அடிகளில் சுருங்க உரைத்துப் பின் இரு அடிகளில் சிவஞானம் பெற்றாரெய்தும் மனவியல்பை உணர்த்து வதால், இந்நூலின் பயன் கூறுவதாகவும் கொள்ளக் கிடக்கின்றது. தம்மை உணர்தலாவது, தமக்கும் இறைவ னுக்கும் உலகுக்கும் உள்ள தொடர்பை அறிந்து, அது ஏன், எப்படி உண்டாயிற்று என்பதை எண்ணுதல். தமையுடைய தன் உணர்வாரென்பது, தமக்கு உலகு, உடல், கருவி ஆகியவற்றை உதவி வாழ்வளித்தவன் முதல்வன் என்று அறிபவர்கள். இவ்வாறு, உயிர்கள் தம்மை உணர்ந்து தமக்கு வாழ்வு அளித்த முதல்வனிடத்து அன்பு செலுத்துவதுதான் சிவஞானம். "ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானமுண்டார்" என்பர், சேக்கிழார் அடிகள். அவ்வாறு உணர்ந்த சிவஞானிகள் எல்லா உயிரையும் தம்முயிர் ஒப்ப எண்ணி அன்பு செய்வார்கள். ஏனெனில், முதல்வன் தங்களைப் போலவே ஏனையோரையும் அன்பராய்க் கொண்டு அருள்புரிபவன்.

***"தம்மைப் போலத் தம்அடியார்க்கும் இன்பமளிப்பவர்"***

என்றும்,

> ***"பரவுவாரையும் உடையார் பழித்து***
> ***இகழ்வாரையும் உடையார்"***

என்றும் திருஞானசம்பந்தர் அருளியிருப்பன இங்கே சிந்திக்கத்தக்கன. மேலும், சிவஞானிகள் தாங்கள் முதல்வ னிடத்தில் எவ்வளவு தொடர்பும் உரிமையும் உடையவர் களோ, அவ்வளவு தொடர்பும் உரிமையும் எல்லா உயிர்களும் உடையவை என்று உணர்வார்கள். இவ் வொற்றுமையால் சிவஞானிகளுக்குத் தம்மை ஒத்த ஏனைய உயிர்களிடத்தில் அன்பும் ஆதரவும் உண்டாகுமே தவிர

வேற்றுமை மனப்பான்மை உண்டாகாது. அதுபற்றியே, 'எம்மை உடைமை எமை இகழார்' என்கிறார். இதனால் சிவஞானம் பெற்றார் செயல்நலம் தெரிவிக்கப்படுகிறது.

இனி, பின் இரு அடிகளில் சிவஞானம் பெறாதவர் இயல்பு கூறுகிறார். சிவஞானம் பெறாதவர்களை, 'தம்மை உணரார்' என்று சுருக்கமாய்க் கூறுகிறார். விளங்க உரைக்கின், அவர்கள் ஏனை உயிர்களையும் தம்மைப்போல 'மண்ணகத்தே வந்து வாழச்செய்தான்' முதல்வன் என்பதையும், அவை வாழ்வாங்கு வாழ்வதற்கு உதவுவது சிவஞானத்தின் பயன் என்பதையும் உணர்வதில்லை. பிறர் வாழ்ந்தால் அன்றித் தமக்கு வாழ்வில்லை (Let live and live) என்பது சைவம். ஆதலால், 'தம்மை உணரார் உணரார்' என்று அருளுகின்றார். இவ்வாறு மக்களை ஒன்றுபடுத்தும் சிவஞானம் பரவாமையினாலே மக்களிடையே வேற்றுமை உணர்வுகள் இடம் பெற்று ஒன்றுபடாதபடி சிதைக்கின்றன. இதனை, "உடங்கு இயைந்து தம்மில் புணரார்" என்று கூறுகிறார். உடங்கு இயைதலாவது, மனம் கலந்து அன்பு செய்து ஒன்றி வாழ்தல். சிவஞானம் பெறாதுபோனால் மக்கள் இனம் ஒற்றுமைப்பட்டு வாழ்வாங்கு வாழும் வளமான நிலைபெறாதென்பது, இத்தகைய கூட்டம் ஒற்றுமைக்குப் புறம்பான பேச்சுகளையே பேசித் திரியுமாதலால் அதனை, 'புறம்' என்றும், சிவஞானிகள் அதனைப் பொருளாய்க் கொள்ளலாகாது என்பதற்காக, 'கேளாம்' என்றும் அறுதியிட்டுக் கூறுகிறார். எனவே, மக்களினம் ஒற்றுமைப்பட்ட வளமுடைய வாழ்வுபெறச் செய்வதுதான் சிவஞானத்தின் முடிந்த பயன் என்பது தெளிவாகும்.

*மெய்கண்டதேவர் திருவடி வாழ்க!*

# பன்னிரு சூத்திரங்கள்

## முதற்சூத்திரம்

1. அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

## இரண்டாவது சூத்திரம்

2. அவையே தானே யாய்இரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

## மூன்றாவது சூத்திரம்

3. உளதுஇல தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

## நான்காவது சூத்திரம்

4. அந்தக் கரணம் அவற்றின்ஒன் றன்றுஅவை
சந்தித்தது ஆன்மா சகசமலத்து உணராது
அமைச்சரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே.

## ஐந்தாவது சூத்திரம்

5. விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமிஅருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே.

## ஆறாவது சூத்திரம்

6. உணர்உரு அசத்துஎனின் உணராது இன்மையின்
இருதிற னல்லது சிவசத் தாம்என
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.

## ஏழாவது சூத்திரம்

7. யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்துஇலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.

## எட்டாவது சூத்திரம்

8. ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்துஎனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

## ஒன்பதாவது சூத்திரம்

9. ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணும்அஞ் செழுத்தே.

## பத்தாவது சூத்திரம்

10. அவனே தானே யாகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னோடு வல்வினை இன்றே.

## பதினோராவது சூத்திரம்

11. காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

## பன்னிரண்டாவது சூத்திரம்

12. செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.

- - - - -

திருக்குறள்வேள்

**ஜி. வரதராஜன்** அவர்கள் எழுதிய,

இம்மைக்கும் மறுமைக்கும்

ஏழேழ் பிறவிக்கும்

வழிகாட்டும் உன்னதமான

**திருக்குறள் - திருமந்திரம் - திருவாசகம்**

விரிவுரை நூல்கள்

**எங்கள் வெளியீடுகள்**



